# வள்ளற்பெருமானின்
# உண்மை வரலாறு

(முதற்பாகம்)

உருவகம் :

**துறவி கந்தசுவாமி**

மணிமாடம், வடலூர்.

வெளியீடு :

**திருவருட்பா பதிப்பகம்,**

வடலூர்-607303.

முதற்பதிப்பு : திசம்பர் 1987

நூல்கள் : 2000

விலை உருபா 5-00

இடம் : அகில உலக சமரச சுத்த சன்மார்க்க
சத்திய சங்கம். வடலூர்-607303.

அச்சிட்டோர் :

வள்ளலார் மின்னியல் அச்சகம், வடலூர்.



கோயிலும்குளமும் நம்முள்ளே கும்பிடும்தெய்வம் நம்முள்ளே
வாயில்லா உயிர்கட்குதவுவதே வழிபாடென்று உரைத்திடவும்
தாயிற்சிறந்த தயவுடனே தரணியில்நிலவிடும் மனிதரெனும்
கோயில்சிதறக் கூற்றுவனும் கொல்வதைத்தவிர்ப்பீர் என்றுகூற
ஆயிரந்தன்னொடு எண்ணூறு அண்டுஇருபத்து மூன்றதனில்
வியுமாஈரைந்து திங்களிலே விரையும் இருபத்தொருநாளில்
பாயிரம்கூறும் சுடர்வாரம் பகவலவன்மறையும் போதினிலே
வாயற்கடங்கா புகழுடைய வள்ளல்வந்து அவதரித்தார்.

—துறவி கந்தசுவாமி

# நமது தலைவன்

1 சாதிமத சமயமெனும் சலசலப்பைச் சாகடிக்க வந்த சதுரன்.

2 சாதிக்கொரு நீதிகூறும் சாத்திரங்களைத் தகர்க்க வந்த தவசீலன்.

3 நால்வருண ஆசிரம ஆச்சார பாகுபாட்டை நாசமுறச் செய்ய வந்த நடுவன்.

4 தெய்வம் பல பேசி பகைத்தீயை வளர்ப்பதைத் தீய்க்க வந்த தீச்சுடர்

5 இறையருளைப்பெற உலகப் பற்றறுக்க வேண்டுமென்று பரணிபாடுவோர் பாட, ஆருயிகட்கு அன்பு செலுத்தி அருளைப் பெறுங்கள் என்று கூற வந்த அருளியல் தலைவன்.

6 தொண்ட மண்டலமா? தொண்டை மண்டலமா? எனப்புலவர்களுக்குள்ளே எழுந்த வாதப்போரில் தகுந்த ஆதாரங்களுடன் தொண்டமண்டலம் எனத்தீர்ப்பளித்த புலவர்கள் தலைவன்.

7 தொல் என்ற ஒன்று குறையத்தொக்கியதுஒன்பது பத்தினைத் தொண்ணூறு என்றும், ஒன்பது நூறினைத் தொள்ளாயிரம் என்றும் கூறுவது தவறு எனச்சுட்டிக்காட்டித் திருத்திய இலக்கண வேந்தன்.

8 சமஸ்கிருதமே தாய்மொழி என்று கூறிய போது தமிழ் தந்தைமொழி என்ற தலை நிமிர்ந்து கூறிய தமிழ் தலைவன்.

9 கருணையில்லாத அரசு கடுகி ஒழியவேண்டும் என்று குரல் கொடுத்த கருணை வடிவன்.

10 ஒத்தார் உயர்ந்தார் தாழ்ந்தார் எவரும் ஒருமை யுளராகி உலகியல் நடத்த வேண்டும் என்று உலகுக்குஆலோசனை கூறிய அரசியல் தலைவன்.

11 எவ்வுலகும் சன்மார்க்கம் பொதுவடைதல் வேண்டும் என்று குரல் கொடுத்த உலக ஒருமைப்பாட்டுத்தலைவன்.

12 பிறந்தவர் இறப்பது என்ற ஏட்டைக்கிழித் தெறிந்து, பிறந்தவர் இறவாதிருக்க முடியும் என்று இருந்து காட்டி மக்களையும் அவ்வழியில் அழைத்துச் செல்ல வந்த அருளியல் தலைவன்.

# வள்ளற்பெருமானின்
# உண்மை வரலாறு

1

வள்ளற்பெருமானின் உண்மை வரலாறு என்ற தலைப்பைக் கண்டவுடனே, இதுவரை வெளிவந்த வள்ளற்பெருமானின் வரலாறுகள் எல்லாம் பொய் வரலாறா? என்ற வினா எல்லோர் உள்ளத்திலும் எழத்தான் செய்யும். உண்மை வரலாறு எது என்றால்? ஒருவர் பிறந்து விவரம் தெரியும் வரை அவரது வரலாற்றை அவரது தாய் தந்தையர் சொல்ல வேண்டும். விவரம் தெரிந்த பின்னர் அவரது வரலாற்றை அவரே சொல்வது தான் உண்மை வரலாறு.

2

3

இப்படி வள்ளற்பெருமான் தனது வரலாற்றினைத் தானே சொல்ல வில்லை யாயினும். பல பாடல்கள் மூலம் அவரது நடைமுறைகள் விளக்கப்படுகிறது. மேலும். ஒருவரது உலகியல் நடைமுறையை அடுத்தவர் ஒரளவு விளக்கலாம். ஆனால் அவரது அருளியல் நடைமுறையை அவரே தான் விளக்க வேண்டும். வள்ளற்பெருமான் தனது வரலாற்றை அவர் எழுதவில்லை காரணம் தன்னைமதியாதிரு என்ற பாதையில் அவர் சென்றார். என்றாலும் சங்கடங்கள் வரும்போது, அதனை விளக்குவதாக அமைந்த பாடல்கள் பலப்பல,

4

5

6

எவ்வாறு தனது வரலாற்றைத் தான் எழுதாது விட்டாரோ அவ்வாறே தனது உள்ளத்திலிருந்து எழுந்த பாடல்களையும் உபதேசங்களையும் ஏட்டில் வடித்து வைக்க வேண்டும் என்று எண்ணமில்லாது விட்டதுபல. அப்படி ஏட்டில் வடித்து வைத்ததையும் ஒன்று சேர்த்து வைக்கவேண்டும் என்று எண்ணமில்லாது விட்டது பலப்பல, அணுக்கத்தொண்டர்கள் ஏட்டில் வடித்துவைத்ததை ஒன்றுசேர்க்க, முயன்ற போது அருளாற்றல பெற்றவர்களது பாடல்களை. அறிவாற்றல் கூட்டப்பெறாதவர்களால் வரிசைபடுத்த முடியவில்லை.

7

பொதுவாக. ஆறாவது திருமுறைப்பாடலொன்றில் மணிக்கதவை திறவாயேமறைப்பை யெல்லாம் தவிர்த்தே என்று வேண்டுகிறார். அதாவது மறைப்பைத் தவிர்த்து "மணிக்கதவந்

திற என்பது பாடலின் பொருள். ஆனால் நான்காவது திருமுறையில் ''மணிக்கதவந் திறப்பித்து மகிழ்ந்தனையங் கழைப்பித்து'' இதுபோன்று அடி நடு முடியென்ற வரிசைபடுத்தாது, முடி அடி நடு என்ற வகையில் முன் பின்னாக இடம் பெற்று விட்டது.

திருவருட்பாவைப் படிக்க எளிதாக, சுவைக்க இனிமையாக, அரிய கருத்தாழமாக" உணர உணர்வுக்கு எட்டாத வகையிலும் கருத்து விரிந்து செல்கிறதே யன்றி அப்பாதையில் நடைபோடத் தொடங்குவோர்க்கு அப்பாதை எளிதாகவும் தெளிவாகவும் இல்லாமல் பாடல்கள் முன்னும் பின்னும் இடம் பெற்றிருப்பது கண்கூடு. பொதுவாக,

ஏமசித்தி
சாகாக்கல்வி
தத்துவ நிக்கிரகம்
கடவுள் நிலையறிந்து அம்மய மாதன

என நான்கு வழி நடை வகுக்கப்பட்டிருக்கிறது. ஏமசித்தி என்றால் தொட்டதைப் பொன்னாக்கும் ஆற்றல், சாகாக்கல்வி யென்றால், சாசாமல் இருப்பதற்குப் பயிலும், ஒழுக்க நெறிக் கடைப்பிடித்தல் உணவுக்கட்டுப்பாடு ஆகியவை. தத்துவ நிக்ரகம் என்றால் தத்துவங்களைத் தன்வசப்படுத்தல், கடவுள் நிலையறிந்து அம்மயமாதல் என்றால் அவனையறிந்தடைதல். என்பதாம். இவற்றில் உணவையும். ஒழுக்கங்களையும் ஒழுங்குப்படுத்தி தத்துவங்களைத் தன்வசப்படுத்திய பின்னரே, தொட்டதைப் பொன்னாக்கும் ஏமசித்தி கிடைக்கும. இவ்வாறில்லாது எடுத்த உடனே ஏமசித்தியென்பது பொருத்தமில்லையல்லவா?

வள்ளலார் நடந்து சென்ற பாதையினைத் தொடர்ந்து வரிசைப் படுத்தித் தெரிவிப்பதே வள்ளற்பெருமானின் உண்மை வரலாறு இது அதிகப்பக்கங்கள் ஆகும். அதனால் இதனை இரண்டுபாகமாக அச்சிட எண்ணி முதல் பாகம் வெளிவந்துள்ளது அனைவரும் வாங்கி படித்து பயன்பெற வேண்டுகிறோம்.

— துறவி கந்தசுவாமி
மணிமாடம், வடலூர்-607303

# பொருளடக்கம்

# உலகைத் திருத்த உத்தமன் வருகை

உலகை உய்விக்க இரவு பகலில்லா இடத்திலுள்ள தெய்வத் திருச்சபையின் கட்டளைப்படி வாழையடி வாழையாகத் தூதுவர்கள் வருகைதந்தனர் எனினும், கொள்கை வினைக் கூட்டுறவால் கூட்டிய பல்சமயக் கூட்டம். அக்கூட்டத்தே கூவுகின்றகலை. கள்ளமுடைய அக்கலைகள் காட்டிய பல கதிகள், அக்கதிகளைத் தருகின்ற தெய்வம், அத்தெய்வங்களின் காட்சி இவைகள் எல்லாம். தன்னலத்தால் ஒரு வல்லவன் கற்பனையாகக் கட்டிவிட்ட பிள்ளைவிளையாட்டு என்று அறியாது. உண்மையென்று நம்பி, உயர்வு தாழ்வு கூறி, பேய் போலத் தலைவிரித்தாடி மண்டைகள் உடையும் படியான சண்டைகள் மலிந்து மக்கள் மாண்டு மடிவதோடு நாடு நலிவும் மெலிவும் அதிகமாவது அத்திருச்சபைக்குத் தெரிந்து தீராக்கவலை பூண்டு இதனைத் தீர்த்து வைக்கத் திருச்சபை கூடுகிறது. அச்சபைக்கு இயற்கை உண்மை வடிவினர் தலைமையேற்கிறார். தேவர் மூவர், சித்தர் முத்தர், மண்டர், மண்டலீகர் தண்டு கமண்டல தாடி சடையுடன் குண்டலீகர் முதலானோர்களால் திருச்சபை நிரம்பி வழிகிறது.

மனிதனைப் புனிதனாக்க அவனியில் பவனிவர அனுப்பிய தூதுவர்கள் எல்லாம் சாதிப் பிரிவினிலே தீ மூட்டுவோம் என்று சீரிஎழுந்து மூட்டிய தீ வாழையில் மூட்டிய நெருப்பாயின; ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்று எழுப்பிய குரல் செவிடன் காதில் ஊதியசங்காயின. மேலும் ஒத்த கருத்தினை ஒருமைப் பாட்டினை எடுத்துக் கூறி பொதுவழியில் அனைவரையும் அழைத்துச் செல்லாது புதுப்புது வழியைக் காட்டி குழப்பமும் மயக்கமும் அதிகம் நிலவச் செய்தனர். இனி பூவுலகெல்லாம் புண்ணிய உலகமாய்ப் பொலியச் செய்ய, தலைமையேற்ற இயற்கை உண்மை வடிவினரின் தலைப்பிள்ளையான அருளால் தான் இயலுமெனவும், அவ்வருளைத் தரணிக்கு அனுப்பிவைக்க வேண்டும் எனவும் திருச்சபை ஏகமனதாக முடிவெடுத்துக் கட்டளையிட்டது.

தலைமையேற்ற உண்மை வடிவினர் தலைமகனைப் பார்த்து, தலைமகனே நீ பூவுலகம் சென்று கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடி பழக்கங்களை மண்போட்டு மூடு; இருட்சாதி தத்துவ சாத்திரக் குப்பைகளை புன்செய் நிலத்திற்கு எருவாக்கிப்போடு; மருட்சாதி சமயங்கள் மதங்கள் ஆச்சிரம வழக்கெல்லாம் குழிவெட்டி அதில் போட்டு மண்போட்டு மூடு; உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவதை ஒதுக்கச்செய்; அகம் கறுத்துப் புறம் வெளுத்திருப்பதை அகற்றும்படி செய்; பட்டினி கிடப்பதைப் பாராது, பழங்கஞ்சியாயினும் வழங்க நினையாது, வட்டிமேல் வட்டியிட்டு வாங்கிப் பெட்டிமேல் பெட்டி வைத்தாண்டு, கொட்டிபோல் கிளைத்து எட்டிபோல் தழைப்பதை வெட்டி வீசியெறி; கடுகு ஆட்டுக்கறிக்கிடுக தாளிக்கவெனெக் கழறிக்களிப்பதை உலகைவிட்டுக் கழட்டிவிடு; காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக் கரும்பை விட்டுக் கடுவிரைத்துக் களிப்பதை மாற்று; கட்டோடு கனத்தோடு வாழ்கின்றோமென்று பட்டோடு பணியோடு திரிந்து கொட்டோடு முழக்கோடு கோலங்கண்டு எட்டோடு இரண்டு சேர்த்து எண்ணத தெரியாதவர்கட்கு உண்மையை நிலைநாட்டு; பண்ணாத தீமைகள் பண்ணி, பகராதவன்மொழி பகர்ந்து, நண்ணாத தீயினம் நண்ணி நடவாத நடத்தைகள் நடப்பதை மாற்று. உடம்பு வருவகையறியாது, உயிர்வகையையறியாது, உடல் பருக்க உண்டு நிதம் உறங்குதற்கே அறிந்து மடம்புகுபேய் மனத்தாலே மயங்குகின்ற உலகவரை மயக்கந்தெளியவை. தொண்டாளப் பணந்தேடி உலகாளச் சூழ்ந்த காமப்பெண்டாளுவதிலே முனைந்து, நாளைச் சண்டாளக் கூற்றுவரில் தடுக்க முடியாது தவிக்கும் உலகுக்குப் புரியவை; ஊர் அறியாது, பேர் அறியாது உண்மையொன்றும் அறியாது கிழக்கும் மேற்கும் அறியாது, உழக்கும் அளப்பதற்கு உளவும்அறிந்து வழக்கறிந்து சண்டையிட்டே வம்பளக்க அறிந்து. வடிக்குமுன்னே சோறெடுத்து வயிற்றிலடைப்பதை விளக்கு; பொய்விளக்கப் புகுந்து வீணபோது கழித்து புலபுலென புதல்வர்களைப் பெற்று, கலகலெனக் களித்து கைவிளக்கு பிடித்தும் பாழுங் கிணற்றில் விழுந்து களிப்பதிலிருந்து விடுபடச்செய்; துன்மார்க்க நடையிடையே தூங்குகின்றவர் கட்கு, தூக்கத்தை விடுகின்ற துணையாக நின்று, பன்மார்க்கம் செல்வதை மாற்றி, சன்மார்க்க சங்கத்தைச் சார்வித்து, மெய்ப்பொருளை உணர்த்தி இகத்திலிருந்தே அனைவரும் பரத்தையடைந்து ஏருற்ற சுக

நிலையடைந்திடச் செய்யெனக் கட்டளையிட்டுக் கடமைக்கு அனுப்பு கிறார் என்பதைத் திருவருட்பாப் பாடல்கள் தெளிவுபடுத்தும்.

ஐயனே! உலகமெலாம் இயக்கும் மெய்யனே! தனித் தலைமைப் பெரும்பதியானத் தூயனே! அத்திரைக்குப்பத்துயிர் ஊட்ட இங்கு எத்தனையோ பெரிய உத்தமர்களிருக்க இந்த பொய்யனுக்கு இப்பெரும் மெய்ப்பணியிட்டீர்களே! அங்குள்ள எத்தர்கள் எல்லாம் இப்பித்தனின் சொல்லை ஏற்பார்களா ? இட்டபணி எப்போது முடியும்? மீண்டும் இத்திருச்சமூகத் தொண்டு எப்போது கிடைக்கும் ? என்று தலைப்பிள்ளையின் வாக்கிலிருந்து குரல் தழுதழுத்து எழுந்தது.

தலைமகனே கலங்காதே, இங்குள்ள பெரியவர்கள் எல்லாம் ஏவலாட்கள். இவர்களில் எத்தனையோ பேர்களை எத்தனையோ தடவை அத்தரைக்கு அனுப்பப்பட்டது. சொல்வதைச் செவிமடுத்து செய்யச் சென்றவர்கள், ஒன்று கிடக்க ஒன்றைச் செய்து மேலும் குழப்பத்தை விளைவித்து வந்தார்களே தவிர, தெளிவடையச் செய்யவில்லை. நீ தலைமகன் ஆனபடியினாலே இத்தலைமைப் பணி உனக்கிடப் பட்டது. மயங்காதே, மனதில் வேறு ஒன்றும் எண்ணாதே துணிந்து செயல் படு, துவளும் போது தோள் கொடுப்போம். கலங்கும்போது கை கொடுப்போம் என உறுதி கூறி இவ்வுலகுக்கு அனுப்புகிறார்.

பேருற்ற உலகிலுறு சமயமத நெறிஎலாம்
  பேய்ப்பிடிப் புற்றபிச்சுப்
பிள்ளைவிளை யாட்டென உணர்ந்திடா துயிர்கள்பல
  பேதமுற் றங்கும்இங்கும்
போருற் றிறந்துவீண் போயினர் இன்னும்வீண்
  போகாத படிவிரைந்தே
புனிதமுறு சுத்தசன் மார்க்கநெறி காட்டிமெய்ப்
  பொருளினை உணர்த்திஎல்லாம்
ஏருற்ற சுகநிலை அடைந்திடப் புரிதிநீ
  என்பிள்ளை ஆதலாலே
இவ்வேலை புரிகஎன் றிட்டனம் மனத்தில்வே
  றெண்ணற்க என்றகுருவே

நீருற்ற ஒள்ளிய நெருப்பே நெருப்பினுள்
நிறைந்திருள் அகற்றும்ஒளியே
நிர்க்குண னந்தபர நாதாந்த வரையோங்கு
நீதிநட ராசபதியே.

அகத்தே கறுத்துப் புறத்துவெளுத்
திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே எனை இந்த
உகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே.

# தந்தையும் மகனும்

இராமையா ஒவ்வொருவராக ஐந்து மனைவியரை மணந்தும், ஐவரும் குழந்தையில்லாது, ஒவ்வொருவராக உயிரடக்கம் கொள்ள. பிறகு ஆறுவது மனைவி சின்னம்மையை மணந்து. அதற்கு சபாபதி, பரசுராமர், சுந்தரம், உண்ணுமலை யெனும் நான்கு குழந்தைகட்குப் பிறகு ஐந்தாவது குழந்தையாக இராமலிங்கர் அவதரிந்தார் என்பது வரலாறு. இராமலிங்கரோ தனது தாய் தந்தை தமையன் தமக்கை இன்னின்னர் என்று எந்த இடத்திலும் கூறவில்லை. தந்தையைப் பெயர் குறிப்பிடாது ஒரு இடத்தில் மட்டும் "தாய் தந்தையரை மதித் தேனோ விரும்பினேனோ" என்றும், தாயைப் பல இடத்தில் "பெற்ற தாய் வாட்டம் பார்ப்பதற்கஞ்சி பேருணவு உண்டனன் சில நாள்" என்றும், தமையன் தமக்கைகளை, தமர் என்று குறிப்பிட்டு "தாய ராதியர் சலிப்புறுகிறபர் தமரும் எனறனைத் தழுவுதல் ஒழிவர்" என்றும் பெயர் விபரம் குறிப்பிடாது குறிப்பிட்டுள்ளார்.

குடும்பகோரம் என்ற தலைப்பில் அமைந்த பாடலில், நமது

தத்துவங்கள் நம்மை இயக்கும் நம்முடைய தினசரிச் செயலை விளக்கிய போது, தந்தை பெண்ணாசையால் மனைவியோடு கூடி குழந்தை பிறப்பதால், "ஆசையே" தந்தை யென்றும்; இந்த உடல் வினையி னுல் வருவதால் "வினைச்சி" தாயென்றும் குறிப்பிடுவர். நமது எல்லோருடைய உடலையும் உபகரித்து வளர்த்து வருவது திரோதாயி யெனும் ஒரு சக்தி. இதனைத் தாய் என்றும் இராமலிங்கர் கூறுவர். தான் ஒரு பெண்ணாகவும், இறைவன் ஒரு ஆணாகவும், அவர்மீது காதல் கொள்வதையறிந்து, மகளுக்கு ஆலோசனை வழங்கல், மகள் நிலையை இறைவனிடம் எடுத்துக் கூறி மணம் செய்து கொள்வீர்களா எனறவர் நிலையைத் தெரிந்து கொள்வதாக அமைந்த பாடலில் திரோதாயியைத் தாய் என்றும் விளக்கப்படுகிறது.

ஆண் விந்தென்ற வித்தை பெண்ணின் கருவறையிலிட அது உருவாகி உலகில் தோன்றுவதால், ஆணைத் தந்தையென்றும், பெண்ணைத் தாயென்றும், உலகில் தோன்றியது முதல வயதையும் கணக்கிடுவர். தாய் முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாள் சுமந்து அந்திப்பகலாய் ஆண்டவனை தோத்தரித்து, பெற்றெடுத்துப் பால் ஊட்டிச் சீராட்டி நோய் வந்தால் பத்தியமிருந்து பாதுகாத்தலிலும் ஒவ்வோர் நேரம் சலிப்படைவர். இவர்கள் உலகத்தேவையை நிறை வேற்றுவர். இதுவும் அவன் செயலால் அன்றி பூரணமாக இவர்கள் செயலால் இல்லையென்பதை விளக்குவதோடு நாம் சிற்றணு உருவாக தந்தையின் சுக்கிலத் துளியின் கண் ஒரு கோடி ஒன்பது லட்சம் கணப் பரியந்தமிருந்து, தாய் கருவறையில் வந்து பூதப் பேரணு உருவாக மாறி ஆறு கோடியே நாற்பத்து லட்சம் கணப்பரியந்தமிருந்து உலகில் தோன்றுகிறோம் என்பர்.

தாயின் கருவறையில் நமது உடல் உருவாகும்போது, அதனைக் கலைக்க எதிரிடும் துருசுகளைக்கலைத்து, உடல் உருவானவுடன் உயிரை அதில் குடிபுக வைத்து அக்கருவறையில் பசித்தபோது பூதகாரிய அமுதம் ஊட்டுவித்து, நாத ஒலியால் பயந்தவிர்த்து, விந்து விளக்கத் தால், இருளை விலக்கி அமுதக் காற்றினால புழுக்கத்தைத் தவிர்த்து, அப்போது மட்டுமல்ல, இப்போதும் எப்போதும் இரவு பகலாக இடை விடாது அருகிலிருந்து மெய்க்காவல் புரிந்து வருவதோடு, எள்ளித் திரிந்தாலும் கோபியாது இன்னமுதம் இந்தாவென்று அள்ளிக்கொடுக் கும் அவனே நமது உண்மை தந்தை, வெந்நீரில் ஆட்டிடில் மெய்

நோரும் என்று அருளாம் நந்நீரில் ஆட்டுகின்றவனே நமது உண்மைத் தாய் என்றும் கூறி ஈன்றோன் (உருவாக்கினோன்) தனை நாளும் எண்ணாது. இந்த உடலை ஈன்றோரை ஈன்றோர் என்றும்எண்ணாதே யென்றும் அறிவித்தார்.

பாரும் விசும்பும் அறியயெனைப் பயந்த தாயும் தந்தையும் நீ என்று அறிவிப்பதோடு தடித்த ஓர் மகனைத் தந்தையடித்தால் தாயணைப்பள், தாயடித்தால் தந்தையணைப்பன், இங்கு எனக்குரிய தந்தையும் தாயும் நீதான். ஆதலால் இந்த அடியவனைப் பலவிதங் களால் அடித்ததுபோதும். இனியும் அடித்தால் தாளமுடியாது ஆதலால் அணைத்திடு என்றொரு பாடலில் அழகாக விவரிப்பர்.

உலகில் மக்கள் தந்தையைக் காணிதா? பணம்தா? பதவி தா, ஏற்ற பெண் பார்த்தே மணம் செய்துவையென்று வேண்டுவ தோடு, தந்தையை இழிமொழிகளால் இழித்துரைத்தும், பிறர் இழித் துரைப்பதைச் செவிமடுத்துச் சகித்தும் இருப்பர். தந்தையாகிய நின்னை பிள்ளையாகிய யான் உலகப்பிள்ளைகளைப்போல எப்போதாவது ஏதாவது என்றாவது விரும்பியதுண்டா? கேட்டதுண்டா? இழித்து உரைத்த துண்டா? பிறர் இழித்துரைத்தலைக் கேட்டுப் பேசாமலிருந்ததுண்டா? எள்ளளவும் தெய்வமில்லை இது தெரிந்துகொள் என்று துள்ளுகின்றோர் கூட்டத்தில் சேராதீர் என்றறிவித்ததோடு, பூவுலக ஆசைகளை விரும் பாது நினது திருவடியை யெனது முடிமீது வைத்து ஆட்கொள்ளுஎன்று வேண்டும் விண்ணப்பமாக, பிள்ளைச்சிறு விண்ணப்பம், பெரு விண்ணப்பம் என்ற தலைப்பின் கீழ் அமைந்த பாடல்களையும் எண்ணத் தக்கது.

எல்லோரும் தனது பெயரின் முன் தலைப்பெழுத்தாக தந்தை பெயரின் முதலெழுத்தைக் குறிப்பிடுவர். இராமையாவின் மகன் இராமலிங்கம் என்றாலும், இராமலிங்கர் தனது கையொப்பத்தில் இரா—இராமலிங்கம் என்று குறிப்பிடாது, திரு—என்றால் எல்லா முடையது, சித்து—என்றால் எல்லாம் வல்லது, அம்பலம் என்றால் பொதுவானது. ஆக திருச்சிற்றம்பலம் என்றால் எல்லாம்வல்லதுவாய் எல்லாம் உடையதுவாய், எல்லார்க்கும் பொதுவானதாகவும் இருப்

பவன் இறைவன் என்றும், அந்தத் திருச்சிற்றம்பலம், சிற்றம்பலம் என ஆகி சிற்றம்பலம் சிதம்பரம் என மருவி, தந்தை சிதம்பரமாக வைத்து, தனது பெயர் முன் சிதம்பரம் என்று குறிப்பிட்டு "சிதம்பரம் இராமலிங்கம்" எனவும் கையொப்பமிடுவர்.

பிறந்த சிறு குழந்தையிலேயே இராமலிங்கரை அவரது தந்தை தாய் தமருடன் தில்லைக்கு எடுத்துச் சென்று வழிபட்டபோது, சிதம்பர சந்நிதான திரை தூக்கத தெரிசித்தபோது, இராமலிங்கர் குழந்தைக் கலகலவென சிரித்தது. பார்த்த முகமன்றி வேற்று முகம் கண்டு குழந்தைகள் சிரிக்காது. இரவு பகலற்ற திருச்சபையிலிருந்து உலகைத் திருத்த அனுப்பி வைத்தத் தந்தை, அந்த சந்நிதானத்தின் உள்ளிருந்து ஆசி வழங்கியதைக் கண்டுதான் அக்குழந்தை சிரித்தது என வியந்து கூறுவாறுமுளர்.

தாம் தில்லை சென்றதைக் கூறவந்த வள்ளலார்; தந்தை, தாய் தமருடன் சென்றிருக்க, தந்தையை முன்னிலைப்படுத்தாது தாயை முன்னிலைப்படுத்திக் கூறியிருப்பதும், அடியவர் வடிவில் வந்து அறுசுவை உண்டு இராமலிங்கர் வருகையை அறிவித்துச் சென்ற இறையவனும், இராமையா இல்லாத போது வந்ததும், தந்தை இராமையா உடல் உயிரடக்கம்கொண்டு தாய் நீடித்திருந்ததும் வியத்தகு செய்திகளாம். ஆனால் அடியவர் பசியுடன் வர சின்னம்மை உணவளிக்க உண்டு களைப்பாறிய அடியவரின் ஆசியால் இராமலிங்கர் அவதரித்தார் என்பதற்கு அகச்சான்றுகளில்லை.

தாய்முதலா ரோடுசிறு பருவமதில் தில்லைத்
 தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்
 வெளியாகக் காட்டியஎன் மெய்யுறவாம் பொருளே
காய்வகைஇல் லாதுளத்தே கனிந்தநறுங் கனியே
 கனவிடத்தும் நனவிடத்தும் எனைப்பிரியாக் களிப்பே
தூய்வகையோர் போற்றமணி மன்றில்நடம் புரியும்
 ஜோதிநடத் தரசேஎன் சொல்லும் அணிந்தருளே.

இராமலிங்கரின் உதவித்தந்தை
பெயர் — இராமையா. தொழில்
நிலமளப்பது

„ உண்மைத்தந்தை பெயர் — இறைவன்
„ உதவித் தாய் பெயர் — சின்னம்மை
„ உண்மைத்தாய் பெயர் — இறைவி
„ வளர்ப்புத் தாய் பெயர் — திரோதாயி
„ உதவிசெய்வோர்பெயர் — செவிலித்தாய்
„ உடன் பிறந்த தமையன் — சபாபதி, பரசுராமர்
„ உடன் பிறந்த தமக்கை — உண்ணாமலை, சுந்தரம்
„ பிறந்த ஆண்டு — சுபானு புரட்டாசி 21
ஞாயிறு பிற்பகல் 5-45 மணி
5—10—1823
„ பிறந்த ஊர் — மருதூர்
„ பிறந்த இடம் — தில்லையின் வடமேற்கு
எல்லையில் உள்ளது
„ பிறந்த நாடு — தமிழ்நாடு

இராமலிங்கர் இளமையிலேயே உதவித் தந்தையையிழந்தார் எனினும் அவர் உண்மைத் தந்தையையே நாடுகிறார். உண்மைத் தந்தையும் அவர் கொடுக்கும் குரல்களுக்குச் செவிமடுத்து அவ்வப்போது விரும்பியதையளித்துக் களிக்க வைக்கிறார் என்பதனை கீழ் வரும் பாடல்களால் விளக்குகிறார்.

அப்பாஎன் றோர்கால் அழைக்கின்றேன் அப்பொழுதே
அப்பா மகனேஎன் றார்கின்றான்-துப்பார்
சடையான்சிற் றம்பலத்தான் தானேதான் ஆனான்
உடையான் உளத்தே உவந்து.

அறிந்திலையோ என் பாடெலாம் என்றே
அழைத்தனன் அப்பனே என்னை
எறிந்திடா திந்தத் தருணமே வந்தாய்
எடுத்தணைத் தஞ்சிடேல் மகனே
பிறிந்திடேம் சிறிதும் பிறிந்திடேம் உலகில்

பெருந்திறல் சித்திகள் எல்லாம்
சிறந்திட உனக்கே தந்தனம் எனஎன்
சென்னிதொட் டுரைத்தனை களித்தே.

திருவளர்பேர் அருளுடையான் சிற்சபையான் எல்லாம்
செய்யவல்ல தனித்தலைமைச் சித்தன்எல்லாம் உடையான்
உருவமுமாய் அருவமுமாய் உபயமுமாய் அலவாய்
ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி ஒருவனுண்டே அவன்றன்
பெருமையினால் எனையீன்றான் நான்ஒருவன் தானே
பிள்ளை அவன் பிள்ளைஎனப் பெரியர்எலாம் அறிவார்
இருமையுறு தத்துவர்காள் என்னைஅறி யீரோ
ஈங்குமது துள்ளல்எலாம் ஏதும்நட வாதே.

என்றெல்லாம் விளக்குவதோடு, இவ்வுலகைப் பார்த்தும், முகமறி யார் போலிருந்தீர் என்னையறியீரோ, முத்தர்எலாம் போற்றுமருட் சித்தர் மகன் நானே என்றும் விளக்குவர்.

இறைவனுக்குத் தான் புத்திரனாகக் கருதிப் புத்திரமார்க்கத் தைப் புகட்டவந்த ஞானசம்பந்தரோ, அல்லது அடிமை மார்க்கத் தைப் போதிக்கவந்த அப்பரோ, அல்லது தோழமை மார்க்கத்தைச் சொல்ல வந்த சுந்தரரோ, அல்லது ஒத்த மார்க்கத்தை விளக்க வந்த மணிவாசகரோ, அல்லது பரம மண்டலத்தில் பரம பிதாவே என்று வணங்குவோர் கூறும் இயேசுவோ, இவர்கள் எல்லாம் தான் தலைப்பிள்ளையென்றோ, ஒரே பிள்ளையென்றோ, அப்பாவென் றழைத்தேன் ஏன் மகனேயென்று குரல் கொடுத்தான் என்றும் கூறக் காணோம் என்றும் அவர்களது நூல்களை ஆய்ந்தோர் கூறுவர்.

தனையா என்றழைத் தே - அருட் - சத்தி யளித்தவனே
அனையா யப்பனு மாய் - எனக் - காரிய னானவனே
இனையா தென்னையு மேல் - நிலை - ஏற்றுவித் தாண்டவனே
உனையான் ஏத்துகின் றேன் - எனக் - குண்மை உரைத்தருளே.

உய்பிள்ளை பற்பலர் ஆவல்-கொண்டே
　　உலகத் திருப்பஇங் கென்னைத்தன் ஏவல்
செய்பிள்ளை ஆக்கிற்றுப் பாரீர்-திருச்
　　சிற்றம பலத்தே திருநட ஜோதி.

பேருல கெல்லாம் மதிக்கத்-தன்
　　பிள்ளைஎன் றென்னைப் பெயரிட் டழைத்தே
சீருறச் செய்தது பாரீர்-திருச்
　　சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

# கல்வி

உள்ளதை மறைத்திருக்கும் அம்மறைப்பை யகற்றி உள்ள வாறு தெரியச் செய்வதே கல்வி என்பதன் பொருள். கல்வியில் சாகும் கல்வி, சாகாக்கலவி யென இருவகை. உலகியல் வாழ்விற் குத் தேவைகளை நாடியடைந்து இடையில் உடலைவிட்டு உயிர் அடங்கச் செய்வதே சாகும் கல்வி, அருளியலை நாடியடைந்து ஊன உடலை ஒளியுடலாக மாற்றி என்றும் நீடித்து வாழச்செய்வதே சாகாக் கல்வி. இது அடங்காததை அடங்க வைக்கும் கல்வி, "மனமடங்கக் கற்பது" படியாததைப் படியவைக்கும் படிப்பு, "படியாத படிப்பு" என்றும் கூறுவர். கற்ற மேலவரொடும் கூடி நிற்பது, கற்பது, கற்கும் நெறி தேர்ந்து கற்பது, கற்றபடி நிற்பது என்பதெல்லாம் இதன் இலக் கணமாகும். இக்கல்வி பயிலுவோனுக்கு உலகியல் கல்வி மிக எளிது இக்கல்வி கற்பவன் இறுதிவரை இராது இடையில் உயிர் அடங்க் நேரிட்டால், அடுத்த பிறவியில் அவை, முன்பிறவியில் கற்ற முடிவு களுக்கு ஏற்ப, இப்பிறவியில், பிறர் சொல்லித்தராமலே படித்தலும் ஒருமுறை சொன்ன உடனே நினைவு கூர்ந்து சொல்வதும் இயற்கை யானது. இதனை "ஒருமையில் தான் கற்ற கல்வி எழுமையில் ஏமாப்பு டைத்து" என்பர் வள்ளுவர்.

பெண்ணையும், மண்ணையும், பொன்னையும், அழகையும், ஆசையையும், அறுசுவையையும் போற்றிப் புகழ்ந்து பொய்யான

கதைகளைப் பாசமுளோர் கைக்குடையவே எழுதிக்கட்டிவைத்து இவ்வுலகப் பொய்க்கதையைப் படித்து, வீண் போது கழிப்பதில் பயனில்லை. மெய்யை மேவி நிற்கவும், கருணையைக் கடைப்பிடிக்கவும், இரக்கத்தைச் சிறக்க வைக்கவும் ஈகையில் திளைக்க வைக்கவும், தயவில் பொருந்தியிருக்கவும் கற்பதே, கற்பன கற்றலும், சாலமெலாம் செயுமடவார் மயக்கம் நீக்கி சன்மார்க்கம் அடையக் கற்பதும் கூறும் ஓர்கணத்தில் எண்ணூறு நினைவு கோடி கோடியாய் எண்ணுவது அடங்கக் கற்பதும்; கருங்கல் மனப்பாறையும உட்கசிந்து உருகக் கற்பதுமே கற்பன அறிந்து கற்பது என்பதாகும்.

அறிவின் கூர்மை கல்வி தெளிவிற்குக் காரணம் என்பர். நூல்களை எடுக்காமலே, அதிலுள்ள ஏடுகளைப் புறட்டாமலே அந் நூலின் உள்ளிருப்பதை எடுத்துச் சொல்வது ஞான அறிவு. ஒரு தடவைப்படித்தோ, அல்லது பிறர் சொல்லக் கேட்டோ பின் சொல்வது ஆறறிவுடையது. பல தடவை சொல்லியும், பல தடவைப் படித்தும் பின் சொல்வது ஐயறிவுடையது. எத்தனையோ தடவைப் படித்தும், எத்தனையோ தடவை சொல்லியும் மனதில் ஏறாமல் சொல்லத் தெரியாமல் இருப்பது அஞ்ஞான அறிவுடையது.

படித்தேன் பொய் உலகியல் நூல் எந்தாய் நீயே படிப்பித்தாய், அன்றியும் அப்படிப்பில் இச்சையை ஒடித்தேனோ நீயே ஒடித்தித்தாய், நின்னடியே துணையென நான் பிடித்தேனே அதுவும் நீயே பிடிப்பித்தாய் என்றும், கற்றேன உலகியல் கல்வியைக் கற்று கருணை நெறி உற்றேன் என்றும் இராமலிங்கர் எடுத்துக்கூறிய சொற்களை வைத்து அவர் பள்ளியில் ஓரளவு படித்தார். அண்ணன் சொற்பொழிவாற்றும் போது கையேடு படித்தார் என்றெல்லாம் கதை கட்டுவர்.

கருவிலே திருவுடையவராய் வந்த இராமலிங்கர் இறைவன் தன்னை, முளைப்பள்ளி பயிற்றாது, எளைக்கல்வி பயிற்றினான் என்றும், கற்றேன் சிற்றம்பலச்கல்வி (சாகாக்கல்வி) கற்று கருணை நெறி

உற்றேன் என்றும் ஓதி ஓதாமல் (ஒருவர் சொல்லிக்கொடுத்து சொல்லாமல்) உணர்வு எனக்களித்த ஆதியீறில்லா அருட்பெருஞ்ஜோதியென்றும், ஓதி உணர்ந்தவர் எல்லாம் எனைக்கேட்ப, எனைத்தான் ஓதாமல் உணர்ந்து உணர்வாம் உருவுறச் செய்யுறவேயென்றும், வேதாகமங்கள் புகன்ற விரிவுகளெல்லாம், ஒவ்வொன்றாகவே விளங்க உரைத்துத் தெரிவித்தாய் பயிலும் ஆசை போகவே என்றும், ஏதும் அறியாது இருளில் இருந்த சிறியேனை ஓதுமறை முதல கலைகள எல்லாம் ஓதாமல் உணர உணர்வில் இருந்து உணர்த்தி, அதன் உண்மை நிலை காட்டி யென்றும் கற்றதும் நின்னிடத்தே, கேட்டதும் நின்னிடத்தே; இன்புற்றதும் நின்னிடத்தே யென்றும்; ஏடகத்தே எழுதாத மறைகள் எல்லாம் என்னுளத்தே எழுத்துவித்த என்னுரிமைப் பதியே யென்றும் இராமலிங்கர் கூறுவதிலிருந்து உலகியல் ல்வியை, உலகியல் ஆசிரியர் இடமிருந்து பயிலவில்லை யென்பதைப் பாடலகள் மூலம் தெளியவைப்பதோடு, வசன நடையிலும் கீழ்குறித்தவாறு தெளிவுபடுத்துவர்.

"தனித்தலைமைக்கடவுளே குமார பருவத்தில் என்னைக் கல்வி பயிற்றும் ஆசிரியர் இன்றியே என்தரத்தில் பயின்று அறிதற்கு அருமையாகிய கல்விப்பயிற்சியை எனது உள்ளகத்தே யிருந்து பயிற்றுவித்து அருளினீர்" என்று வசனநடையில் வள்ளலார் நமக்குத் தெளிவுபடுத்தியும், இவர் ஆசிரியரிடம் ஓரளவு பயின்றார் என்று உரைப்பவர்களின் அறியாமையை என்னென்றுரைப்பது.

பத்து ஆள் சுமை ஒருவண்டி பாரம், நானூறு வண்டி சுமை ஒரு சூல் வண்டிபாரம், இதுபோன்று ஆயிரம் சூல் வண்டி நிறைந்த நூல்களை ஒருவன் ஆயிரம் பிறவி யெடுத்தாலும் படிக்க முடியாது. ஆனால் அவைகளை அருள் முன்னிடமாகப் படிக்கத் தொடங்கில் கண நேரத்தில் கற்றுத் தெளியலாம் என்பதற்கேற்ப, வள்ளலார் சிறு பருவத்தில் தில்லையில் திரைதூக்கத் தெரிசித்தபோது வேய்வகை மேல் காட்டாது எல்லாம் வெளியாகக்காட்டினான் என்பதிலிருந்து தெரியலாம்.

முதல் மாணவராகிய தொழுவூர் வேலாயுதனார், இராமலிங்கர் ஓரளவு பயின்றார் என்று சொன்னதைக் கேட்டோ, அல்லது நூல் களில் எழுதியதைக் கண்ணுற்றோ, ஓதாமல் அனைத்தையும் உணர வைக்கும் எமது மேதாவைப்பள்ளி விழைந்துற்றது என்று உரைப்ப தெவன்? என்று கடினமான சொற்களால் சாடுகிறார். உலகியல் கல்வியைத்தான் ஆசிரியரிடத்தில் பயிலவில்லை, என பாடல்கள் மூலமும், வசன நடைமூலமும் தெளிவுபடுத்திய பின்னரும், முதல் மாணவர் தொழுவூரார் விளக்கிய பின்னரும் ஐயம் என்பார் துய்யர் இல்லை யென்பது மெய்யெனலாம்.

உலகியல் கல்வியை எல்லையிட வந்த தொல்காப்பியம், எட்டு பத்தினை எண்பது என்றும், ஒன்பது பத்தினை தொண்ணூறு என்றும் கூறுவது தவறு எனவும் தொல் என்பது ஒன்று குறையத் தொக் கியது.பத்து பத்து நூறு, இதில் ஒரு பத்து குறைவதை தொண்ணூறு என்பது எப்படி. பத்து பத்தில் ஒருபத்து குறைந்தால் அது தொன்பது பத்து நூறில் ஒரு நூறு குறைந்தால் தொண்ணூறு என்றும் பத்து ஆயிரத்தில் ஒரு ஆயிரம் குறைந்தால் அது தொள்ளாயிரம் என்றும் விளக்குவர்.

பதினாறு என்பதை எண்களால் குறிப்பிடும் போது ஒரு என்று அருகில் ஒரு ஆறு 16 இதனை வள்ளலார் விளக்கும் போது ஒரு பத்தும் ஒரு ஆறும் சேர்ந்ததே பதினாறு.அதனால் ஒருபத்தின் அருகில் ஆறு 106 என்று குறிப்பிடுவது தான் பதினாறு என்ற விளக்குகிறார்.

தொல்காப்பிய இளக்கணங்களிலே புள்ளிவைத்த எழுத்து மெய்யெழுத்து என்று பெயர், வள்ளலார் திருக்கரம் தாங்கி எழுதும் எழுத்துக்களிலே தவறான எழுத்துக்கள் இடம் பெற்றுவிட்டால் அந்த எழுத்தின் மீது கோடிட்டு அடித்தல் செய்யாது அந்த எழுத் தின் மீது ஒரு புள்ளியை வைத்து விடுகிறார், மேலும் தொடர்ந்து எழுத்திக்கொண்டே செல்கிறார். தொல்காப்பிய இலக்கணங்களிலே புள்ளி வைத்த யெழுத்து மெய்யெழுத்து, வள்ளலாரின் இலக்கணங் களிலே புள்ளி வைத்த எழுத்துப் பொய்யெழுத்து.

ஒருமுறு ஞானி எழுதும் போது தவறான எழுத்தும் இடம் பெறுமா? என்ற ஐயவினாவிற்கு விடையும் தருகிறார் வள்ளலார். புலவர்கள் எழுதும் போது கற்றோமென்ற அகங்காரம் குறுக்கிடும் போது தவறான எழுத்துக்கள் இடம் பெற்றுவிடும். ஞானிகள் எழுதிக் கொண்டேயிருக்கும் போது மனம், அறிவினோடோ. அல்லது இறைவனோடோ ஒன்றிவிட்டால் அப்போது வெறுங்கை எழுதுவதில் பிழையான எழுத்துக்கள் இடம் பெறுவதும் இயற்கை யென்கிறார் வள்ளலார்.

வள்ளலார் தொடங்கி ஓரளவே எழுதி, அதனை நிறைவு செய்து அனுப்பும்படி தொழுவூர் வேலாயுதனாரைப் பணிக்க அவரும் அவ்வாறே நிறைவு செய்து அனுப்பிய ஒரு இலக்கணக்கடிதம்; இன்றைய புலவர்களையெல்லாம் பொருள் கூறுவதிலே திகைக்க வைக்கிறது என்பதும் உண்மை.

# தணிகையின் மீது தணியாத காதல்

இராமலிங்கர் சிறுவயதில் தந்தை இராமையா உயிரடக்கம் கொண்டதோ, தாய் சின்னம்மையாரோடு பொன்னேரி சென்றதோ பின் சென்னை வந்ததோ, தமையன் சபாபதி கல்வி போதிக்க முயன்றதோ, மாடி தனி அறையில் இருக்க சம்மதம் தெரிவித்து இருந்ததோ. தமையன் விரிவுரையன்று, அவருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டு விரிவுரைக்கு போக இயலாதவை அறிவிக்கச் சென்றவர் அவரே சிறப்பாக விரிவுரையாற்றியதோ ஆக இவைகளையெல்லாம் எந்த இடத்திலும் விளக்கக் காணோம். திருஒற்றியூருக்கு சென்ற இராமலிங்கரை அடியவர் ஒருவர் உமது ஊர் எது என்று வினவ, அதற்கு இராமலிங்கர், கற்றவர்கள் சூழ்ந்து இருக்கக் கூடிய இந்த ஒற்றித்தலத்திலிருந்து அடுத்த ஐந்து நாழிகை தூரம் நடந்து அடையும் இடத்திலுள்ள அழகிய சென்னையென்று விடையளிப்பதிலிருந்து சென்னை வாழ்வைத் தெளிவாக்குகிறார். மேலும்

உதவி புரிவதில் சிறப்புடையது, நன்னெறியில் நடைபோடுவது, அரண் போன்று தலைநகராக விளங்குவது, தக்க சமயத்தில் கைகொடுப்பதில் உயர்வுடையது, பெருமை மிக்கது, உலகத் தலைவர்களால் பாராட்டக் கூடியது. அரவணைப்பதில் தாய் போன்றது. தருமங்கள் செய்வதில் உயர்வுடையது. உலகிற்குத் திலகம் போன்றது, நட்பு விலகாதது நல்ல குடும்பங்களை உடையது, நிகரில்லாதது எனப் பாராட்டக் கூடியது, கைமாறு கருதாது உதவுவது, துன்பம் வந்த போதும் துவளாது உதவுவது, தவறுகளில்லாதது, பக்தியில் சிறந்தது, செழுமையுடையது, தானம் செய்வதில் ஆர்வமுடையது, செல்வம் மிகுந்தது. தன்னைக் கொடுத்தாயினும் உதவி புரிவது' நல்லவரோடு இணக்கமுடையது, ஒழுங்கு குலையாதது, எவ்வகையிலும் குறைவுபடாதது என சென்னையைப் பாராட்டிய வள்ளலார் பின்னாளில் தேட்டிலே மிகுந்த சென்னையிலிருந்தால், ஆடம்பரமான வாழ்வு செருக்கை ஏற்படுத்தும் என்று உள்ளம் பயந்து, நாட்டிலே சிறிய ஊர்ப்புறங்களிலே நண்ணி, அடுத்த காட்டிலே பருக்கைக் கல்லிலே திரிந்துற்ற இளைப்பை ஏட்டிலே எழுத முடியாது என்று கூறுவதிலிருந்து அவர் சென்னையைவிட்டு வெளியேறிய செய்தி புலனாகிறது.

சென்னையிலே கந்தகோட்டமிருந்தும், தணிகையின் மீது தணியாத ஆர்வங்கொள்ளுகிறார். ஆனால நாமே ஆலயம் செல்வது போல அவர் தணிகைக்கு செலல விரும்பவில்லை. தணிகை முருகன் தன்னை வாவென அழைக்கவேண்டும் என்பதை. "தணிகைக்கு வாவென ஒரு மொழி நல்குவையே" என்று வேண்டுவதிலிருந்து கண்டுகொள்ள முடிகிறது. அண்ணா நின்னடியையன்றி வேறு ஒரு ஆதரவு எனக்கில்லை. துன்பால் நெஞ்சழிந்து புண்ணாக வருந்துகின்றேன். இன்னும் வஞ்சர்பால் போய் புலந்து முகவாட்டமுடன் புலம்பி நிற்கப் பண்ணாதே. யான் மிகவும் ஏழை. நலமேவு தொண்டர் அயனாதி தேவர் நகையேகு நலுகு தணிகாசலமேவி உன்றன் இருதாள் புகழ்ந்து தரிசிப்பதென்று புகல்வாய், ஐயனே! இன்னும எத்தனை நாட் செல்லும் இடர்க்கடல் விடுத்துஏற, தூய்யனே! இன்னும் எத்தனை நாட் செல்லும் வெந்துயர்க்கடல் நீந்தமெய் ஐயனே! இன்னும் எத்தனை நாள் செல்லும் அல்லல்விட்டு அருள்மேவ, நீயும் நானும் ஓர்பாலும்

நீருமாய் நிற்க வேண்டுகிறேன், பாலும் நீரும் போல நினது திருவடி யம் யானும் ஒன்றாகக் கலந்து கொள்ளச் செய்வாயா? என்று அழுது தொழுது கண்ணீர் வடிக்கிறார்.

எப்படி அங்கலாய்த்தும் அவன் வருகை தராததினாலே. சோதிடர்களை அழைத்துத் தனது சோதிடத்தைத் துருவிப் பார்க்கச் சொல்கிறார்.

சோதிடர்களே! அவர் அனைவரையும் கவனிக்கப் பன்னிரு கண்களையுடையவர், ஆறுதல் கூற ஆறுமுகமுடையவர், வாரி வழங்க பன்னிரு கரங்களையுடையவர், அடியேனிடம் வருவாரா? ஆட்கொள்ளுவாரா? தணியாத அருட்தாகத்தைத் தணிப்பாரா? தீராத மோகத்தைத் தீர்ப்பாரா? என்று சோதிடத்தை நன்றாகத் துருவிப்பார்த்து சொல்லுங்கள் என்று சோதிடம் கேட்கிறார்?

அவன் வருகை எட்டும், நினக்கு கிட்டும் என சோதிடர்கள் சொன்னதை வைத்து அவன் வருகையை வழிமேல் விழிவைத்து பார்த் தும், காலங் கடந்தும் வரவில்லை. ஆதலால் பறவைகளை அழைத் துத் தூது அனுப்புகிறார்.

ஓ பறவைகளே! எனது தலைவர் தணிகையில் மயில்ஆடஆடிக் கொண்டிருப்பதினாலே. வருகைதரவேண்டும் என்று வாடிக் கொண் டிருப்பதும், பாடிக் கொண்டிருப்பதும் அவரது செவியில், கண் களில் படவில்லைபோலும், கோதை ஒருத்தி தங்களது வருகையைக் காணாது குலைந்து நிற்கிறாள். உணவை மறந்தாள், உறக்கத்தை யும் மறந்தாள், உற்றவர் பெற்றவர் மற்றவர்களையும் துறந்தாள், இந்த உலகையே மறந்து, உன்னையே நினைந்து பித்துப் பிடித்தது போல் பிதற்றிக் கொண்டிருக்கிறாள் என்று ஒருதரம் சொல்லி வாருங் கள் என்று தூது அனுப்புகிறார்.

பறவைகள் சென்று சொன்ன உடனே தலைவர் வருகை தருகிறார். அதனை விளக்கு முகத்தான் சீர்திகழ் தோகை மயில்மேலே இளஞ்செஞ்சுடர் தோன்றும் திறம்போலே கூர்வடிவேல் கொண்டு நம் பெருமான் வரும் கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள், அவருடைய ஆறுமுகங்களில் புன்சிரிப்பும், இரண்டு ஆறுபுயந்திகழ் அற்புதமும், வீறுபரஞ்சுடர் வண்ணமும் ஓர் திருமேனியும் பாருங்கள் வெள்வளைகாள் என்று தோழியிடம் கூறி வியக்கிறாள். வருகை தந்தவர் முன்னால் நிற்கிறார் இவரும், பண்ணேறு மொழியடியர் பரவி வாழ்த்தும் பாதமலர் அழகினைக் கண்ணேறு படுமென்றோ கனவிலேனும் காட்டு என்றால் காட்டுகிலாய் கருணையீதோ என்று கலங்கியவர் அத்திருஉருவைக் கண்குளிரக் காணுகிறார். கண்டவுடன் அவர் சிரிக்கின்றார், உடனே மறைந்தும் விடுகிறார். இதனை "மான் கண்டகை உடையார் திருமகனார் தமைமயில்மேல் நான் கண்டனன் அவர் கண்டனர் நகைகொண்டனர்" என விளக்கி, கண்டும் ஆட்கொள்ளாது மறைந்ததை வியந்து, அதனை மறந்து ஒற்றித் தியாகனைப் பற்றிக்கொள்ளமுயல்கிறார்.

பின்னர் முருகன் என்பது அழகுடையவன், குமரன் என்றால் இளமையுடையவன், ஆறுமுகம், பன்னிரண்டுகரம், கால்வேல மயில் இவைகள் எல்லாம் தத்துவம் என்று விளக்குகிறார்.

# ஒற்றியில் வள்ளலார்

திருத்தணிகை முருகனிடமிருந்து தனக்கு அருள் கிடைக்காததை தெரிந்து கொண்ட வள்ளலார், ஒற்றித்தியாகனை நாட முயல்கிறார். மனம் ஒத்துக்கொள்ளவில்லை. அதற்குப் புத்திமதிகளைக் கூறி அழைத்துச் செல்வதைக் காண்போம்.

மனமே நாட்டில் நல்லது சொல்ல முன்வருவார் எவருமில்லை. கெடுமொழிதான் சொல்வார்கள் அதனைக் கேட்டு மயங்காதே. துன்ப

வாழ்வினைச் சுகமென எண்ணித் துணிந்து விடாதே, உனக்கு எது வேண்டினும் தடையிலாது இன்று வாங்கி நான் ஈகுவேன் உனக்கு. மன்னுருத்திரர் வாழ்வு வேண்டுமா? மாலயன் பெருவாழ்வு வேண்டுமா? அன்ன ஊர்திபோல் ஆக வேண்டுமா? அமையும் இந்திரன் ஆக வேண்டுமா? மறப்பிலாச் சிவயோகம் வேண்டினும், இறப்பிலாதிருக்க வேண்டினும் வாங்கித்தருகிறேன், அந்த வன்னியஞ்சடை எம்பிரான் இருக்கும் வளங்கொள் ஒற்றியூருக்கு என்னுடன் வா? என்று அழைக்கிறார்.

மயங்குகின்ற நெஞ்சைப் பார்த்து தூரமென்று எண்ணாதே, மிக ஓரமாகவே இருக்கிறது, இடையில் பசி வந்தால் என்ன செய்வது என்று எண்ணாது, ஆலக்கோயில் அன்று சுந்தரர்க்காய், செம்மை மாமலர்ப்பதங்கள் நொந்திடவே வீடுதோறும் சொறு இரந்து கொண்டுவந்து அளித்தவன் இருக்கிறான், இடையில் காமப்பயல் கடுகிவருவான் என்று கலங்காதே, நமச்சிவாயம் சொல்லு அவன் ஓடிவிடுவான், புறப்படு, காலன் வந்துவிட்டால் போக முடியாது. காரியம் கெட்டுவிடும், கூட்டுவிக்குள் மேலெழவே கூற்றுவன்வந்து ஆவிதனை வாட்டுவிக்கும் காலம் வருமுன்னே, சீக்கிரம் வா, என்று அழைக்க எழுந்துவந்த நெஞ்சம், ஆசையென்ற ஒரு சந்தில் நுழைகிறது. சென்று நீ புகும் வழியெலாம் உனைத்தேடயென்வசம் அல்லவென் நெஞ்சே, இச்சிறு பொழுதும் பெயர்ந்து போகிறது, இரவு வருமுன் விரைந்துவா? இல்லையென்றால் உன்னை விட்டுவிட்டு சென்று விடுவேன். நான் சுகத்தில் வாழ, நீ நரகத்தில் ஆழ நேர்ந்திடும். அப்போது என்மீது சொல்லவில்லையென்று பழி சுமத்தாதே என்று புத்திமதிகளைச் சொல்லி அழைத்துக்கொண்டு செல்கிறது. ஆலயம் செல்லுமுன் இரவு வந்துவிடுகிறது. வீதியில் வேறு ஒரு இடத்தில் தங்குகின்றனர்.

ஒற்றித் தியாகர் வீதியில் பவனி வருகிறார் என்று சொல்லக் கேட்டு, எழுந்து நான் அவிழ்ந்த உடையை திருத்துமுன், யெனது நெஞ்சம் விழுந்து கூத்தாடி, அவர்முன் எனை இழுத்துச் சென்றது, அடேயப்பா அவரது அழகை என்னென்று சொல்வேன், பழுதிலாதவன் திருமால், அழகைப் படைப்பவன் பிர்மன், இருவருங்கூடி

எழுதினாலும் எழுத முடியாது. பார்த்த கண்கள் பார்த்தபடி இமைக்காது நின்றன, எண்ணம் அவரை விட்டுப் பிரியாதிருந்தன, இடையில் உடுத்திய ஆடை அவிழ்ந்து கலைந்தது, முடிந்த கூந்தலும் அவிழ்ந்து குலைந்தது. கைகள் மெலிந்து வளையல்கள் தானே கழன்று விழுந்தது. இதனைக் கண்டயெனது திரோதாயி யென்ற தாய் கன்னிப் பெண்கள் காளையர்களைக் காணுதல் கூடாது, நீ சொல்லுக்கும் வீட்டிற்கும் அடங்காத பெண் என்றும். இப்படிச் செய்வது நம் குலத்திற்கு அடுக்காதென்றும் வசைமாலை சூட்டுகிறாள்.

வீட்டிற்கு வந்தும், வள்ளல் என்ற மகள் அவனையேயெண்ணி வாட்டமுறுவதைக் கண்டு, புத்திமதிகளைச் சொல்லுகிறாள் சத்தியென்ற தாய். மகளே அந்த தியாகன், ஆக்கமில்லாதவர், தூக்கமில்லாதவர், குடும்பமது விருத்தியாக வேண்டும் என்ற ஏக்கமில்லாதவர். பேரில்லாதவர். ஊரில்லாதவர், பிறவாதவர் இறவாதவர், தாய் தந்தையுடன் பிறந்தோர் யாருமில்லாதவர், வெள்ளி மலையும் பொன் மலையும் அவர்க்கு வீடு என்று சொன்னாலும் அவர் கள்ளி நெருங்கிய சுடுகாட்டில் தான் இருப்பார், அவர் இடையில் ஒரு பெண்ணை வைத்து, இவளுக்குத் தெரியாது சடையில் ஒரு பெண்ணை மறைத்து வைத்திருக்கிறார், நீ போனால் உன்னை எங்கே வைப்பார், அவர் பட்டுடையவர் என்று எண்ணாதே, அவர்க்குக் கட்டத் துகிலும் கிடையாது கங்கையை உடுத்திருப்பதோடு கரித்தோலையுமே உடுத்திருப்பார், நீ போனால உனக்கு அதுதான் தருவார், அவர் அணிந்திருப்பது விலையுயர்ந்த ஆபரணம், அவரிடம் போனால் அது நமக்குக் கிடைக்கும் என்று எண்ணாதே, அவர் அணிந்திருப்பது பாம்பு. பாம்பென்றால் படையும் நடுங்குமல்லவா? அவர் எருக்க மலரே சூடுவார், நீ எழில் மல்லிகையென்று எண்ணி விடாதே. அவர் பேயோடு ஆடுவார் உன்னால் ஆட முடியுமா? உயிர்கள்தோறும் ஓடி ஒளிப்பார் உன்னால் ஓட முடியுமா? உருக்கு நெருப்பே அவர் உருவம், உனக்கும் அவர்க்கும் உறவு எப்படி ஏற்படும்? என்று நீண்ட நேரம் புத்திமதிகளைச் சொல்கிறாள் சத்தியென்ற தாய்.

உலகமுடையார் தனது ஊரை ஒற்றி வைத்தார் என்றாலும், உலகவர் புகழாது காபாலியாகத் திரிகிறார் என்று இகழ்ந்தாலும்,

பெருமையுடையார் மனைதோறும் போய் பிச்சையெடுத்தார் என்றாலும், அருமை மணியார் அம்பலத்தில் ஆடித் திரிவார் என்றாலும், கோவணமே உடையாக உடுத்தினார் ஆனாலும், கூலிக்கு மண்ணெடுத்து மொத்துண்டவர் என்றாலும், யானையின் தோலை உரித்துப் போர்த்தியவர், விசையன் வில்லடிபட்டு விடுபட்டவர் என்றாலும், கலக விழியாய் யானவர் மேல்வைத்த ஆசையைக் கைவிடமாட்டேன் என்று திட்டவட்டமாகக் கூறிவிடுகிறது அந்த வள்ளல் எனும் பெண்ணரசி.

பின்னர் மனமெனும் தோழியிடம் அந்த வள்ளல் எனும் பெண்ணரசி கூறுவதாவது, தோழியே யெனது தாய் சொல்வது பொருந்தாது. அவரே இந்த அகிலத்தைப் படைப்பவர், அவரைக் காணாது பெற்றோரோடு பேசமாட்டேன், பாயில் படுக்கமாட்டேன், கண்கள் உரக்கம் கொள்ளமாட்டேன், பரிந்து நீரும் பருகமாட்டேன், முடிக்கோர் மலரும் முடிக்கமாட்டேன், கண்களில் நீர் வடிப்பதை நிறுத்தமாட்டேன், சொறு எள்ளளவும் உண்ணமாட்டேன், பாடல் ஆடல் பயில மாட்டேன், ஞாலத்தெவையும் விரும்பமாட்டேன் என்று உறுதி சொல்லி விடுகிறது அந்த அருளரசி.

வள்ளல் எனும அருள் அரசி இறைவனை எண்ணி, உண்ணாது உறங்காது பிதற்றிக்கொண்டிருப்பதைக் கண்ணுற்ற சுற்றிலுமுள்ளவர், இதற்குப் பேய் பிடித்து விட்டது. என்று மந்திரவாதியை அழைத்து வந்தனர். அவனும் பேய்பிடித்து விட்டது என்று கூறி ஆடு பலியிட்டு உதிரக்காவுடன் பூசைபோடவேண்டும் என்று கூறினான். அப்படியே ஆட்டுக்கடாவும், பூசைக்குரிய சாமான்களும் வந்தன. ஆடு பலியிடப்போவதைக் கண்ட அருளரசி இந்நிலையை யெண்ணி வருந்துகிறாள்.

இம்மை யறையனைய வேகுர மாதருமா
இமமையுமை யிம்மையையோ என்செய்த-தம்மைமதன்
மாமாமா மாமாமா மாமாமா மாமாமா
மாமாமா மாமாமா மா.

இம் — இந்த
றைய — தையல்
மைய — மையலால்
நையவே — நலியவே
சூர் — வனதேவதை
உமா — குன்றியதாக
மாதர் — மாதர்கள் எல்லாம் கூறி இந்த ஆட்டினைப்பலியிடு கிறார்களே.

இம் — இந்த
மை — ஆடு
யுமை — உங்களை
யிம்மை — இந்த பிறப்பிலே
ஐயோ — பாவம்
என் செய்தது — என்ன கொடுமை செய்தது.

இந்த ஆட்டைப் பலியிட்டால், யான் எண்ணியிருக்கின்ற எண்ணமானது அவனை எட்டுமா? எட்டியவுடனே அவன் திரும்பி வருவதை யறிந்து யென்னை வாட்டி வதைக்கும் ஆசை இனி வாட்டி வதைக்க முடியாது என்று அஞ்சுமா? அவன் வந்து எனனோடு கூடிக்கலந்து அந்த ஆறுமா? இந்த மாமா என்ற எழுத்துக்களிலே பத்தொன்பது மா என்ற எழுத்து இருககிறது. அதில் எட்டுமாவைக் கூட்டி எட்டுமா? ஐந்து மாவைக்கூட்டி அஞ்சுமா? ஆறு மாவைக்கூட்டி ஆறுமா? என்று பொருள் கொள்ளவேண்டும்.

எந்த விதத்தும் பயனில்லை யென்றவர்கள் கைவிட்டனர். வள்ளலெனும் அருள் அரசியோ தனது எண்ணங்களை இறைவனிடம் தெரிவிக்க நாரைகளை அழைத்துத் தூது அனுப்புகிறது.

ஒ நாரைகளே! இங்கே வாருங்கள், திருமால் சேவடிகாணப் பன்றியாக உருமாறிச் சென்றும் பிரமன் முடியைக்காண அன்னப் பறவையாக வடிவெடுத்து முயன்றும் காணமுடியாது நின்ற பெரியவர் அழகு நிறைந்தவர், ஒற்றியில் இருப்பவர், ஒருநாள் பவனிவரப் பார்த்து! அன்று முதலா இன்றளவும், உண்ணும் உணவோடு உறக்க

மும் நீத்துவிட்டு உம்மையே யெண்ணி இளைத்துப் போனாள் என்று ஒரு சொல் சொல்லி வாருங்கள் என்று தூது அனுப்புகிறாள் அந்தத் தோகை.

அடுத்துக் குறமாதை அழைத்துக் குறிகேட்கிறாள். ஓ!குறமாதே இங்குவா? எனக்கு ஒரு குறி சொல்லு. அந்தி நிறத்தவர், ஒற்றியில் அமர்ந்திருப்பவர், அடியாளைப் புத்தியில்லாதவள் என்று புறக்கணிப் பாரா? அல்லது போற்றி மகிழ்வாரா? கூட என்பால் வருவாரா? வாராது என்னை மறப்பாரா இன்று வருவாரா? நாளை வருவாரா? மற்று என்று வருவார்? நன்றாகக் கவனித்து ஒரு குறி சொல்லு. வருவார் என்று சொன்னால் உன்வாய்க்கு பழத்தொடு சர்க்கரை வாங்கி வழங்குவேன் என்கிறாள் அந்த அருளரசி.

பொய்யர் உளத்துப்புகுதாதவர், எட்டிக்கனியும் மாங்கனி போல் இனிக்க உரைக்கும் இன்சொலினார். அயன்மால் நாடுகினும் சந்திப்பறியாதவர். காலை மலர்ந்த கமலம் போல கவின் செய் முகத்தவர் ஆடல் உடையவர் ஊடல் அறியாதவர், தொழுது வணங்கும் சுந்தரற்குத் தூது நடந்தவர், பாவமும் பவமும் பழியும் அனுப்புபவர், வாக்குக்கடங்காப் புகழுடையவர், நோக்குக் கடங்கா அழகுடையவர், அவரை விட்டதினால மானம் உடையார் எம் உறவோர் வாழாமைக்கே வருந்துகிறார், பேணி வாழாப் பெண் எனவே பெண்கள் எல்லாம் பேசுகின்றார், புன்சொல் செவிகள் புகத்துயரம் பொறுத்து முடியேன் புலம்பி நின்றேன், எள்ளாதிருந்தப் பெண்கள் எலலாம் இகழா நின்றார், வையமடவார் நகைக்கின்றார், மாரன்கணையால் திகைக்கின்றேன், கண்டார் கண்டபடி பேசக் கலங்கிப் புலம்பிக் கலங்குகின்றேன், மங்கைப்பருவம் மணமில்லா மலர் போல் ஒழிய வாடுகின்றேன், என்ன செய்வது தெரியவில்லை யென்று கூறித்திகைக்கிறாள் அத்தேமொழியாள்.

சோதிடர்களை அழைத்துத் தனது சோதிடத்தைத்துருவிப் பார்த்துச் சொல்லச் சொலகிறாள் அத்தோகை, சோதிடர்களே முன்னே நஞ்சருந்தி தேவரைக்காத்தவர், சிரித்து முப்புரத்தை

எரித்தவர். ஒற்றியில் உள்ள புண்ணியர், என்னைக் கூட வருவது இன்னுஞ்சில நாள் சென்றிடுமா? அல்லது இன்றே வருவாரா? அவர் என்னைக் கூடுமிடம் ஒற்றித்தலமா? அல்லது தில்லைச் சிதம்பரமா? அந்த ஒற்றித்தியாகருக்கும் எனக்கும் மணப்பொருத்தம் உண்டா? இல்லையா? அவர் களிப்போடு மாலை யளிப்பாரா? கன்னியெனவே தள்ளி விடுவாரா? அவராகவே என்னிடத்தில் வருவாரா? அல்லது நானாக அவரிடம் செல்லவேண்டுமா? அவருக்கு மாலையிட நான் உள்ளத்தில் வைத்த கருத்து முடிந்திடுமா? முடியாது அழிந்திடுமா? துக்கம் அகன்று சுகம் அளிக்கும் தொடர்பு உண்டா? இல்லையா? மகிழ்ந்து அருட்கடல் நீராடுவேனா? ஆடமாட்டேனா? அப்படியான் அவரிடத்தில் வலியச்சென்றால் வாவென்றழைப்பாரா? பார்த்தும் பாராதிருப்பாரா? உய்த்தமதியால் நன்றாக சோதிடத்தைத் துருவிப்பார்த்துச் சொல்லுங்கள் என்கிறாள் அந்தத் தோகை.

ஒற்றித் தியாகர், மாறுவேடத்தில் அருளரசியின் முன்வந்து நின்று, நான் இருப்பது ஒற்றியூர். அன்னம் கொடு என்கிறார். தோழி அன்னம் கொண்டுவா என்று அழைத்தவுடன் முன்னம் பசி போயிற்று என்கிறார். திகைத்து திரும்பும்போது இவ்வன்னம் இன்னும் கொடு என்கிறார். விளக்கம் தெரியாமல் திகைத்து என்ன இது என்று தோழியை வினவுகிறாள். அவர் சோற்றுப் பசியெடுத்து வந்தவரல்ல, நினது அன்னம் போன்ற நடையைக் காண ஆர்வப் பசி கொண்டுவந்தவர். அதனால்தான் நீ திரும்பும்போது இவ்வன்னம் இன்னும் கொடு என்று கேட்கிறாள் தோழி.

தன்னந் தனியா யிங்குநிற்குஞ்
சாமி யிவரு ரொற்றியதா
மன்னந் தருவீ ரென்றூர்நா
னழைத்தே னின்னை யன்னமிட
முன்னம் பசிபோ யிற்றென்றூர்
முன்னின் றகன்றே னிவ்வன்ன
மின்னந் தருவா யென்கின்று
ரிதுதான் சேடி யென்னேடீ.

துதிப்பவர்களின் துதிகள் எல்லாம் சேரும் ஒற்றிவாழ் தரும துரையே, நீர்முன்னர் திருவிளையாடல் புரிந்தது என்ன ஊர் என்று கேட்டேன். எனது பெயரில் முன் உள்ள இரண்டு எழுத்தினை எடுத்துவிட்டால் என்னவருமோ அதுதான் என்றார், உமது பெயர் யாது சொல்லும் என்றேன், நீ என்னையொரு பெயரிட்டழைத்தாயே அந்த பெயர்தான் என்று சொல்கிறார் தோழி இது என்ன? நீ அவரை தருமதுரையேயென்ற பெயரிட்டு அழைத்தாயல்லவா அந்த பெயர் முன் உள்ள இரண்டு எழுத்து "தரு" என்பதை எடுத்து விட்டால் மதுரையே என்று வரும். அவர் திருவிளையாடல் புரிந்தது மதுரையேயென்கிறார் அம்மா.

துதிசே ரொற்றி ளௗர்தரும
துரையே நீர்முன் ஞடலுறும்
பதியா தென்றே னம்பெயர்முற்
பகரீ ரெழுத்தைப் பறித்தென்ருர்
நிதிசேர்ந் திடுமப் பெயர்யாது
நிகழ்த்து மென்றே னீயிட்ட
தெதுவோ வதுகா ணென்கின்ரு
ரிதுதான் சேடி யென்னேடீ.

ஒற்றியிலிருந்து வந்தவர் என்னைத் தேடி வந்தார் எனக்கருதி, யென்னைக் கூடுவீரா என்று கேட்டேன். அவர் தருகையுடனே யகங் காரதனை யெம்மடியார்தமை, மயக்கையிருகைவளை சிந்து என்கின் றார் தோழி அதுவா? தருகையுடனேயிரு, அகங்காரந்தனை அகற்று, அடியார்க்குத் தொண்டு செய், உலக ஆசையென்ற மயக்கை விலக்கு அப்போதுதான் கூடலாம் என்கிறார் அம்மா.

ஒருகை முகத்தோர்க் கையரேனு
மொற்றித் தேவ ரிவர்தனம்தான்
வருகை யுவந்தீ ரென்றனைநீர்
மருவி யணைதல் வேண்டுமென்றேன்
தருகை யுடனே யகங்காரந்
தனையெம் மடியார் தமைமயக்கை

யிருகை வளேசிந் தென்கின்ரு
ரிதுதான் சேடி யென்னேடீ.

ஒற்றியிலிருந்து வந்தவரே இயல்பாக அடியார்க்கு அருள் புரியும் செயலாக உடையவரே! உமது கரத்திலும், சிரசிலும் கண்டத்திலும் இருப்பது என்ன என்று கேட்டேன், அவை மூன்று பிநாகம் என்று சொல்கிறார் தோழி என்ன அது. பிநாகம் என்றால் சூலம் கரத்திலிருப்பது, பிநாகம் என்பதில் முன் உள்ள பி. என்ற எழுத்தை யெடுத்துவிட்டால் நாகம் அது கண்டத்திலிருப்பது, நாகம் என்ற சொல்லில் நா. என்ற எழுத்தை எடுத்துவிட்டால் கம் என்று வரும். அது கங்கை சிரசில் இருப்பது என்று சொல்கிருர் அம்மா.

வயலார் சோலே யெழிலொற்றி
வாண ராகு மிவர்தமைநான்
செயலா ரடியர்க் கருள்வீர்நுஞ்
சிரத்து முரத்துந் திகழ்கரத்தும்
வியலாய்க் கொண்ட தென்னென்றேன்
விளங்கும் பிநாக மவைமூன்று
மியலாற் காண்டி யென்கின்ரு
ரிதுதான் சேடி யென்னேடீ.

ஒற்றியிலிருந்து வந்தவரைப் பார்த்து உமக்கு ஊர் ஒற்றி மட்டுமா? வேறு ஊர்களும் உண்டா என்று கேட்டேன். அவர் பேரூர், தில்லையூர், பெரும்புலியூர், பிடவூர், சடவூர் முதலாக வேரூர் அநந்தம் என்றார். பெரும்புலியூர் என்று சொல்கிறீர், அதற்கு ஏற்ப புலித்தோலே ஆடையாக அணிந்துள்ளீர், அவ்வூருக்கு உம்முடன் எம் போல்வார் வந்தால் அப்புலிகள் சும்மா விடுமா? அம்மாடி சொல்லும் போதே பயமாயிருக்கே என்று கேட்டேன், நான் சொல்லும் பெரும் புலியூர் என்பது, பசிக்கு மனிதர்களேக் கொன்று தின்னும் புலிகள் நிறைந்த ஊர் அல்ல. மாதர்கள் காலிலணிந்த சிலம்போசைக் கேட்ட மாதவர் போல, அதாவது உன்னேப் போன்ற இளம்பெண் களேக் கண்டால் பயந்து ஓடி ஒளிந்துக்கொள்ளும் தவப்புலிகள் நிறைந்த ஊர் என்று சொல்கிறார் தோழி.

ஊரு ரிருப்பி ரொற்றிவைத்தி
ருர்தான் வேறுண் டோவென்றே
ஞேருர் வழக்கிற் கரியையிறை
யுன்னி விளை முரொன்ருே
பேருர் தினையூர் பெரும்புலியூர்
பிடவூர் கடவூர் முதலாக
வேரு ரனந்த மென்கின்ரு
ரிதுதான் சேடி யென்னேடீ.

கவினுலகைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருக்கிற காரிருள் வெய்யருளத்தே புகுதவிரைகிறது. கதிரவனும் ஒளி வீசி கவினுலகை மகிழவைக்க விரைகிறான், இவர்களும் நெஞ்சை அழைத்துக் கொண்டு ஒற்றித் தியாகேசன் சந்நிதிக்கு விரைகிறார்கள். சந்நிதியின் அருகில் சென்றவுடனே அந்த தியாகேசன் தோன்றி காட்சி தருகிறன். காட்சி தந்த அவன் உடனே மறைந்து விடுகிறான்.

ஓதல் ஒழியா ஒற்றியில், ஈதல் ஒழியா வண்கையுடையவர், தொண்டு புரிவோர் தங்கட்குத் துணையாயிருப்பவர், உலகை அளித்து வினையால் ஆட்டி நின்று அம்பலத்தில் ஆடி நிற்பவர். ஏட்டில் அடங்காக் கட்டமுடனிருந்தேன், என் முன் உருக்காட்டி மறைந்தார்; ஒற்றியிடை என் முன் உருக்காட்டி ஒளித்தார், ஒற்றி கோயிற்கருகே எதிர் நிற்கப் பார்த்தேன் பார்ப்பதன் முன் மறைந்தார், அன்னோ திருவம்பலத்தேயெம் ஐயர் உருக்கண்டேன் அதுதான் பொன்னோ, பவளப் பொருப்பதுவோ, புது மாணிக்க மணித்திரளோ, மின்னோ விளக்கோ, விரி சுடரோ மேலையொளியோ யென்னுரைப்பேன். என்னாயகனார் அவர் கழலை இன்னும் ஒருகால் காண்பேனோ என்றதுடன், கண்டவுடன் மறைந்ததால், தாம் கண்டது கனவா? நனவா? என்று ஐயுறுகிறார்.

அடுத்து கோயிலுக்குள் சென்று சந்நிதியையடைந்து அத் தியாகராஜன் திருஉருவைப் பார்த்து கேட்கிறார் வள்ளலார், சுந்தரர் திருமணம் செய்து கொள்ள முயன்றபோது, நீ சென்று தடுத்து, நீ

யெனக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று உமது முதாதையர் ஓலையெழுதித் தந்தனர் என்று படியோலைக்காட்ட, சுந்தரர் அதனைப் பிடுங்கிக் கிழித்தெறிய, பின்மூல ஓலையைக் காட்டித் திருமணம் செய்துகொள்ளவிடாது தடுத்து விட்டது போல அல்ல, வேலை செய் யென்று சொன்னால் போதும். இரவு பகலாக உளம் வெறுப்பிலாது வியந்து செய்வேன், பூதம் நும்படையெனினும் அஞ்சேன், புதிய பாம்பிற்குப் பூண் பூட்டவும் பயப்படேன், கூலி கேட்கமாட்டேன், நீயே வலிந்து கொடுத்தாலும் அணுவளவும் வாங்கமாட்டேன், உணவு அறுசுவையோடு கேட்பேன் என்று எண்ணாதே, உப்பிடாத கூழி னும் உவந்து உண்பேன், கொஞ்சநாள் பணிசெய்து விட்டு உலக வரைப்போல வேறு ஒருவரிடம் பணி செய்ய ஓடிவிடுவேன் என்று எண்ணாதே, மாலினோடு அயனுக்கு ஏவல் மறந்தும் செய்யமாட் டேன், புதியவனாயிருக்கிறேன் எதையாவது தூக்கிக்கொண்டு ஓடி விடுவேன் என்று எண்ணாதே, யான் பழையவன், முதலிலிருந்தே பணி செய்பவன் அந்தப் பழங்கணக்கினை எடுத்துக்கொள்ளலாம் என்று கேட்டும் யாதொரு பதிலும் வரவில்லை.

தாய்தந்தை யில்லாதவர்கட்கு நீயே தாய் தந்தையென நின்திருப் பெயர் கேட்டு, சிந்தை நொந்து வந்தடைவார்க்கு உண்டு இல்லை யென்று வாய்திறந்து ஒரு வார்த்தையும் சொல்லாமல் இருக்கிறீரே, நீர் ஊமையா? ஊமையாயினும் தலையால் கையால் சாடைகாட்டு வரே! திருமாலயன் போற்றத் தியாகர் என்ற பெயரினை எடுத்தீர், வறுமையில் வாடி வந்தவர்கட்கு ஒன்றும் தரமுடியவில்லை யெனறால் தியாகம் செய்யும் தியாகராஜர் என்ற திருப்பெயர் நினக்குப் பொருந் துமா? நானே பிச்சை யெடுத்துண்கின்றேன் என்றால் பிச்சை யெடுத் துண்போர்களும் கேட்டால் இட்டுண்பார்களே! அதுகூட நின்னிடத் தில் இல்லையே ஒருக்கால் இந்த கோவிலின் உள் நீர் இருக்கிறீரா? எங்காவது ஓடி ஒளிந்து கொண்டீரா? என்று பலவாறு கேட்டும் பதில் ஒன்றும் வரவில்லை.

இதற்குள் நெஞ்சு வேறுஒன்றை நாடிஓடுகிறது. ஓடுகின்ற நெஞ்சை ஒரு சொல் கேட்டுப் போகும்படி நிற்கச் சொல்லி 703 வரிகளால் நெஞ்சுக்கு அறவுரை புகட்டுகிறார். வேலை வருங்கால் ஒளித்து மேவு கின்றாய், நின்தலைக்கு ஓலை வருங்கால் எங்கு ஒளிப்பாயோ?

## பெண்ணாசை

வாடிப்பிலஞ்சென்று வான்சென்று ஒளித்தாலும்
தேடிச் சுடுங்காமத் தீ.
மண்ணில் தமைக்காணா வண்ணம் நினைத்தாலும்
நண்ணித் தலைக்கேறும் நஞ்சு
பேய் பிடித்தால் தீர்ந்திடும் பெண்பேய் பிடித்தால் விடாதே
நாய் பிடித்தால் போலாகி விடும் [செந்
வேய்ந்தால் அவர் மேல் விழுகின்றாய் வெந்தீயில்
பாய்ந்தாலும் அங்கோர் பலனுண்டு.
சென்றால் அவர் பின் செல்கின்றாய் வெம்புலிப்பின்
சென்றாலும் அங்கோர் திரணுண்டு
நின்றால் அவர்பின் நிற்கின்றாய் கண்மூடி
நின்றாலும் அங்கோர் நிலையுண்டு
கண்டால் அவருடம்பைக் கட்டுகின்றாய் கல்லணைத்துக்
கொண்டாலும் அங்கோர் குணமுண்டு
கொண்டாருடன் உணவு கொள்ளுகின்றாய் குக்கலுடன்
உண்டாலும் அங்கோர் உறவுண்டு
காட்டாக்குரல் கேட்பாய் கர்த்தபத்தின் பாழ்ங்குரலைக்
கேட்டாலும் அங்கோர் கிளருண்டு
பெண்ணென்றால் யோகப் பெரியோர் நடுங்குவரேல்
மண்ணின்றார் யார் நடுங்கமாட்டார்கள்.

## பொன்னாசை

வைத்திழந்து வீணே வயிறெரிந்து மண்ணுலகில்
எத்தனைபேர் நின்கண் எதிர்நின்றார்
ஆய்ந்தோர் சிலநாளில் ஆயிரம்பேர் பக்கலது
பாய்ந்தோடிப் போவதை நீ பார்த்திலையோ
நாட்கொல்லி யென்றால் நடுங்குகின்றாய் நாளறிய
ஆட்கொல்லி யெனபரிதை ஆய்ந்திலையே
பச்சிலையால் பொன்னைப் படைப்பாரேல் மற்றதன்மேல்
இச்சை உனக்கு எவ்வாறு இருந்ததுவே
இட்டமலம் பட்டவிடமெல்லாம் பொன்னாமென்றால்
இட்டமதை விட்டற் கியைந்திலையே.

## மண்ணாசை

மண்ணாசை கொண்டனை நீ மண்ணாளும் மன்னர் எலாம்
மண்ணால் அழிதலைப் பார்த்திலையே
மண் கொண்டார் மாண்டார்தம் மாய்ந்த உடல்வைக்க அயன்
மண் கொண்டார் தம்மிருப்பில் வைத்திலிரே
விண்ணேகுங்கால் அங்கு வேண்டுமென வீண்டுபிடி
மண்ணேனும் கொண்டேக வல்லாரோ
என்னதென்றான் முன்ஒருவன் என்றனதென்றான் பின்ஒருவன்
இன்னது நீ கேட்டு அதுபற்றி எண்ணிலையே.
மண்கொடுப்பேன் என்றுரைக்கில் வைவார் சிறுவர்களும்
மண் கொடுக்க நீதான் மகிழ்ந்தனையே.

என்று மூவாசைகளையும் பற்றி அதற்கு புத்திமதிகளைப் புகட்டி விட்டு மற்றும் உபதேசங்களையும் கூறுகிறது.

நின்றிருந்தார் நிலைகுலைய வீழ்ந்துயிர்தான்
சென்றார் எனக்கேட்டும் தேர்ந்திலையே
தொட்டார் உணவுடனே தும்மினார் அம்ம உயிர்
விட்டார் எனக்கேட்டும் வெட்கிலையே
உண்டார் படுத்தார் உறங்கினார் பேருறக்கம்
கொண்டார் எனக்கேட்டும் கூசிலையே
நேற்று மணம் புரிந்தார் நீரானார் இன்றென்று
சாற்று வதும் கேட்டு தணந்திலையே
ஊர்ந்தார் தெருவில் உலாப் போந்தார் வானுலகம்
சேர்ந்தார் எனக்கேட்டும் தேர்ந்திலையே
என்னே யிருந்தார் இரும்பினார் ஈண்டிறந்தார்
அன்னே யெனக் கேட்டும் ஆய்ந்திலையே
இக்கட்டவிழ்த்து இங்கு எரிமூட்டு எனக்கேட்டும் நீ
முக்கட்டும் தேட முயன்றனையே
பாருண்ட காட்டில் பலர் வெந்திடக்கண்டும் நீ
சோறுண்டிருக்கத் துணிந்தனையே.

தாயார் மனையார் தனயரார் தம்மவரார்
நீயார் இதனை நினைந்திலையே
ஏங்குவரே யென்பாய் யியமன் வரில் நின்னுயிரை
வாங்கி முடியிட்டகத்தில் வைப்பாரோ.
உற்றசிறார் நம்மடையா தோட்டுகிற்பார் தென்திசைவாழ்
மற்றவன் வந்தால் தடுக்க வல்லாரோ
கூடி யழத்து ணையாய்க் கூடுவார் வன்னரகில்
வாடி யழும் போது வருவாரோ
பற்றற்றான் பற்றினையே பற்றியிடல் வேண்டும் அது
பற்றற்றால் அன்றி பலியாது—பற்றற்றல்
வேதனையால் ஈங்கு விரியும் சகப்பழக்க
வாதனைபோய் நீங்கிலன்றி வாராது—வாதனையும்
ஈனமந்தோ இவ்வுலகம் என்று அருளை நாடுகின்ற
ஞானம் வந்தால் அன்றி நலியாது—ஞானமது
பங்கமடைந்தார் அவையைப் பாராது சாதுக்கள்
சங்க மடைந்தாலன்றிச் சாராது.

வன்சொல் சொல்வதே கொள்ளாது இன்சொல் புக எண்ணிடு, பொய்யுரையிலே நில்லாது மெய்யுரைக்க பொல்லா விரதத்தைப் போற்றாது கொல்லா விரதத்தைக் வன்புகழைக் கேட்காது அவன் புகழைக் கேட்டிடு. செக்குற்ற போல் சிந்தை கலங்காது முக்குற்றந்தன்னை முறிக்க மிண்டரொடும் கூடி வியக்காது தொண்டரொடு கூடிச் கன்று முகங் கொண்டு கடுகடுத்துப் பாராது என்றும் முக ஏற்றிடு, உலகர் மெய்யடியன் என்றுரைக்க பொய்யடிமை கள் பூணாதே, மானஞ் செயாது மனநொந்திரப்போர்க்குத் செய்வாரைத் தடுக்காதே, ஈ பத்தாவென்று இரப்போர் கண்டு கோபத்தால் நாய் போல் குரைக்காதே, இந்த சொல்லைக் என்று நல்லோர் சொன்ன புத்திகேளாமல் எல்லைக்கல் ஆபத்தில் வீசங்கொடுத்து எட்டுவீசமெனப் பிறரை மோசஞ் முயலாதே. மந்திரத்தைவிடத் தந்திரம் பெரிதாகவும், சூதென்பதைச் சுற்றமாகவும், நஞ்சுக்கு மேலான வஞ்சமெலாம் கைவசமாக ஆணவமே காணியாட்சியாகவும், புல்லறிவே பொருளாகவும், மூட

ருக்குள் முதல்வனாகவும் பேதையென்பது உரிமைப் பேராகவும் கொள்ளாதே என இப்படி நெஞ்சுக்குப் புத்திமதிகளைச் சொல்லியும் அந் நெஞ்சு ஓரிடத்தில் நிலைகொள்வதாயில்லை.

நெஞ்சே நீ இரக்கம் ஈகை கருணை தயவில்லாதிருக்கிறீர், உனக்கு நெஞ்சு என்ற பெயர் பொருந்தாது, கருங்கல்லென்றே பெயர் வைக்கலாம் என எண்ணி, அக்கல்லையும் சிற்பி அழகாக சிலைவடித்துவிடுகிறான், கருங்கல்லாக என்னுள்ளிருக்கின்ற நின்னை சிற்பியாகிய யான் எப்படித்தான் அடித்து உடைத்தாலும் நீ சிலை வடிக்க வசப்படாததினாலே உனக்குக் கல் என்ற பெயரும் பொருந்தாது, கொடிய இரும்பு என்ற பெயர் வைக்கலாம் என்றெண்ணி அந்த இரும்பும் கொல்லன் உலையில் வைத்து ஊதி பழுக்க வைத்து விரும்பியபடி செய்து விடுகிறான். நீ இரும்பாக என்னுள்ளிருக்கிறாய், கொல்லனாகிய யான், புத்தியென்ற உலையில் வைத்து எப்படி ஊதினாலும், நீ பழுக்கவுமில்லை, விரும்பியபடி செய்யமுடியவில்லை.

இதனால் உனக்கு இரும்பு என்ற பெயரும் பொருந்தாது, மரத்திற்கு மரம் தாவும் குரங்குபோல. ஓரிடத்தில் நில்லாது ஒன்றிலிருந்து ஒன்றுக்குத்தாவிக் குதித்தோடுவதினாலே உனக்குக் குரங்கு என்ற பெயர் வைக்கலாம் என்று எண்ணிய அவர், குரங்கு அங்குபோ இங்குவா, அதை எடு இதை எடு என்று கூறி ஆட்டுகின்றோன் சொல்வழிவிட்டு ஆடாது என்னுள்ளத்தில் குரங்காக இருக்கும் நெஞ்சே, நின்னை வளர்ப்பவனாகிய எனது ஒரு சொல்கூட கேட்கமறுத்து என் சொல்படி ஆடாத, நின்சொல்படி என்னை ஆட்டுவிப்பதினாலே அக்குரங்கென்ற பெயரும் பொருந்தாது, நீ பேய் போல அங்கும் இங்கும் அலைந்து அலைந்து திரிவதினாலே உனக்குப் பேய் யென்ற பெயர் வைக்கலாம் என்று எண்ணுகின்றார். அப்பேயும் அஞ்செழுத்தைப் பேசுகின்றோர் தம்மைப்பிடிக்காது. பேயாக என்னுள்ளத்திருக்கும் நெஞ்சே, நான் அஞ்செழுத்தை, ஆறெழுத்தை எட்டெழுத்தை விடாமல் நெட்டுருப் போட்டாலும் நீ யென்னை விட்டு விலக வில்லை, ஆதலால் இந்த பேயென்ற பெயரும் பொருந்தாது. கண்டோரை 'வள்' என்று குலைத்துக் கவ்விப்பிடிக்கும்

நாய் போல நல்லவர் கெட்டவர் என்றறியாது தாயென வந்தாலும் சீயென ஒதுக்குவதால், உனக்கு நாய் என்ற பெயர் வைக்கலாம் என்றெண்ணி அந்த நாய் வளர்த்தவனைக் கண்டால் குலைக்காது, நீ நாய் ஆக என்னுள்ளத்தில் இருக்கிறாய், உன்னை வளர்த்துக் கொண்டிருக்கிறேன். என்னை அடிக்கடி குலைப்பதோடு, கவ்விப்பிடித்தும் வருவதினாலே உனக்கு நாயென்ற பெயரும் பொருந்தாது. யாருக்கும் அடங்காத புலிபோல், நீ எவருக்கும் அடங்காதிருப்பதினாலே உனக்குப் புலியென்று பெயர் வைக்கலாம் என்பர். ஆனால் அப்புலியும் ஒருவனிடத்தில் வயப்பட்டு விட்டால் அவனை எதிர்க்காது, நெஞ்சே புலியாக என்னுள்ளத்திருந்து எனக்கு வயப்பட்ட நீ அடிக்கடி யென்னை எதிர்ப்பதினாலே புலியென்ற பெயரும் உனக்குப் பொருந்தாது. அதனால் நீ போகின்ற வழிபொய், நீ புரிவதும் பொய், அதனால் விளைகின்ற விளைவும் பொய்; நின்னறிவும் பொய்; நின்னுடலும் பொய்; நின்தவமும் பொய், நின் நிலையும் பொய் அதனால், உனக்கு நஞ்சு என்ற பெயரே பொருந்தும், நஞ்சு யென்பதற்குப் பதிலாக நெஞ்சு என்று ஒரு கீற்று, “ந” என்ற எழுத்துக்கு முன் ஒரு கீற்று “ெ” என்னையறியாமல் இட்டழைத்தேன் என்று தெளிவுபடுத்துவர்.

பாவிநெஞ்சம் யென்பாலிராதோடி பாவையர் மயலில் படிந்து விடுவதால்; சேவியாதயென்பிழை பொறுத்திடவேண்டுவர். பட்டிப் பட்டி ஊர்திரிந்து பணமே நிலமே பாவையரேயென ஒட்டிக்குதித்து சிறு விளையாட்டி ஓடும் மனக்குரங்கை கட்டவை யென்று பிறாக்குப் புத்திமதி கூறுவர், பின்னர் மனதைப் பார்த்து, மனமெனும் ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே நீதான் மற்றவர்போல் எனை நினைத்து மருட்டாதே, இனமுற என் சொல்வழி இருந்திடு. என் சொல்வழி ஏற்றிலையானாலோ தினையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன், உலகம் சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே, நனவில் யெனையறியாயோ யாரெனவிங்கிருந்தாய், ஞானசபைத்தலைவனுக்கு நல்லபிள்ளை நானே யென்று கூறுவர்.

## தெய்வம் உணவளித்தது

இராமலிங்கர் சென்னையிலிருந்து ஒற்றியூர் தினம்தினம் சென்று

வருகிறார். ஒற்றியில் ஒருநாள் நிட்டை கூடிய அவர் இரவு நெடு நேரமாகி வீடு திரும்புகிறார். கதவு தாளிட்டிருக்கிறது, பசியும் அதிக ரிக்கிறது. கதவைத் தட்டி யெழுப்பி உணவருந்த எண்ணுகிறார். ஆனால் பிறருக்குத் துன்பம் தருவதைவிட நமது பசித்துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளலாம் என எண்ணி ஒட்டுந்திண்ணையில் படுத் துறங்குகிறார். பசியோடிருந்த கல்தவனைக்கும் உணவளிக்கும் அவன் பக்தியோடு நிலவும் பாலகன் பசியோடிருப்பதை யறிந்து, தமக்கை உள்ளிருந்து வருவது போல வந்து தட்டி எழுப்பி ஒற்றிக்குப் போய் பசியோடு இருந்து விட்டாயா? என்றுஒரு தட்டில்உணவு படைக்கிறார். உண்டுபடுத்துறங்க, தமக்கைபோல வந்தவரும் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே செல்ல, சிறிது நேரத்தில் உண்மையான தமக்கைக் கதவு திறந்து வெளிவந்து தம்பியை உண்டு உறங்கும்படி யெழுப்ப உண்மை வெளியாகியது.

தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணம்
திருஅமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே
ஒற்றியிற்போய்ப் பசித்தனையோ என்றெனையங் கெழுப்பி
உவந்துகொடுத் தருளியஎன் உயிர்க்கினிதாந் தாயே
பற்றியஎன் பற்றனைத்தும் தன்அடிப்பற் றாகப்
பரிந்தருளி எனைஈன்ற பண்புடைஎந் தாயே
பெற்றியுளார் சுற்றிநின்று போற்றமணிப் பொதுவில்
பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்உவந் தருளே.

இதனைப்பிரிதோரிடத்தில் இருளிரவில் ஒருமூலைத் திண்ணை யில் யான் பசித்தே இளைப்புடனே படுத்திருக்க யெனைத் தேடிவந்து, பொருளுணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியை போக்கிய ருளிய புனித தாயே என்றும். பிரிதோரிடத்தில், நான் பசித்த போதெல்லாம் தான் பசித்ததாகி நல்லுணவு கொடுத்தென்னைச் செல்வமுற வளர்த்தே யென்றும், பிரிதோரிடத்தில் நள்ளிரவில் சோறளித்த நற்றாய் யென்றும் கூறுவர்.

## தரையில் விழாமல் தவிர்த்தது!

இந்த நிகழ்ச்சி நடந்தது, சென்னையில் உள்ள வீடா? அல்லது ஒற்றியூராயென விளக்கவில்லை. இரவு நெடுநேரம் நிட்டையில் இருந்தவர், நிட்டை கலைந்து, ஒரு ஓட்டுத்திண்ணையில் படுத்துறங்குகிறார். பாதியிரவில் தூங்கிய வள்ளலார் புரளுகிறார், ஒட்டுத்திண்ணையில் இடமில்லாது தவறி கீழே விழுகிறார். இறைவன் அடியவர் வடிவில் தோன்றி, விழாமல் கை கொடுத்துத்தாங்கி, கொண்டுபோய் பிரிதோரிடத்தில் கிடத்துகிறார். இதனை ஒரு பாடல் மூலம் விளக்குகிறார் இராமலிங்கர்.

ஓங்கியஓர் துணையின்றிப் பாதிஇர வதிலே
உயர்ந்தஒட்டுத் திண்ணையிலே படுத்தகடைச் சிறியேன்
தூங்கிமிகப் புரண்டுவிழத் தரையில்விழா தெனையே
தூக்கிஎடுத் தணைத்துக் கீழ்க்கிடத்தியமெய்த் துணையே
தாங்கியஎன் உயிர்க்கின்பம் தந்தபெருந் தகையே
சற்குருவே நான்செய்பெருந் தவப்பயனும் பொருளே
ஏங்கியஎன் ஏக்கமெலாம் தவிர்த்தருளிப் பொதுவில்
இலங்குநடத் தரசேஎன் இசையும் அணிந்தருளே

## அடிமுடி சூடல்

இறைவன் திருவடி முடிமீது சூட்டவேண்டும் என்று நெடுநாட்களாக வேண்டிய வள்ளலார், ஓரிரவில் எல்லோரும் படுத்துறங்கும் இடத்திலே உறங்கப்படுக்கிறார், சிறிது நேரத்திற்கொல்லாம், இவர் தலைப்பக்கமாக இன்னொருவர் படுத்து இவரது முடியில் அவரது அடிபடும் படி காலை நீட்டுகிறார். இவர் அக்காலை யெடுத்து அப்புறத்தே வைக்கிறார். ஓரிருதடவை இவ்வாறு நடைபெற்ற பின் அடிக்கடி முடிமீது அடிபடும்படி கால் நீட்டுபவன் யார் என்று வேகப்பட்டு அக்காலை யெடுத்து அப்புறத்தே பொத்தென்று வைக்கிறார். உடனே அவர் அப்பா, நீ யெனது பிள்ளை யானுனது தந்தை, யெனது அடி நினது முடிமீது படக்கூடாதா எனக்கூறி மறைந்து விடுகிறார். அறியாமல் செய்தவறினை எண்ணி வருந்துகிறார்.

அதனை விளக்கும் இதோ ஒரு பாடல்.

நீநினைத்த நன்மையெலாம் யாம்அறிந்தோம் நினையே
நேர்காண வந்தனம்என் றென்முடிமேல் மலர்க்கால்
தான்நிலைக்க வைத்தருளிப் படுத்திடநான் செருக்கித்
தாள்களெடுத் தப்புறத்தே வைத்திடத்தான் நகைத்தே
ஏன்நினைத்தாய் இவ்வளவு சுதந்தரம்என் மகனே
எனக்கிலையோ என்றருளி எனைஆண்ட குருவே
தேன்நிலைத்த தீம்பாகே சர்க்கரையே கனியே
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழி ஏற்றருளே

இணையிலாக் களிப்புற்று இருந்திட எனக்கே
துணையடி சென்னியில் சூட்டியத் தந்தையே

—(அகவல்)

## அழுக்குக் கந்தைக்கு ஆற்றாதிரங்கள்

ஒருநாள் திருவலிதாய ஆலயத்திற்குச் செல்கிறார். அந்த ஆலயமூர்த்திக்கு, அழுக்குடனே ஓட்டைகள் நிறைந்த ஆடையை அணிவித்திருக்கிறார்கள். அதனைக்கண்டு மனம் வருந்துகிறார்.

திருவலிதாயத் தலைவநீ, கந்தையுடுத்தியிருக்கும் கணக்கது என்கொலோ, உடுத்திய கந்தை துன்னுவாரிலையோ பரஞ்ஜோதியே! தொடுத்த கந்தையை நீக்கித்துணிந்தொன்றை உடுத்துவாரிலையோ இவ்வுலகிலே, நீ பால் உடுத்த பழங்கந்தையைவிடத்தோல் உடுப்பதே மிகத்தூய்மையே தூசுடைய கந்தையைச் சுற்றி ஐயோ பரதேசி போல் இருக்கிறீரே, யாரும் அற்றவரோ சொல்லும் என் ஐயரே! நீர் கந்தையை உடுத்திருப்பதைக் கண்ணுற்றால் கல்லையொத்த நெஞ்சமும் கரைகின்றதே என்று கண்ணீர் வடிக்கின்றார்.

## இராமலிங்கரின் திருமணம்

உலகில் எதன்மீதும் ஆசையில்லாத நிலையிலே ஒரு உயர்ந்த

குலத்துப்பெண். அப்பெண்ணை உரியவளாக்கிக் கொள்வதே நமது திருமணம். நம்மிடத்தே சாந்தம் தவழ்ந்தால் அதுவே அறிவும் அழகும் ஆண்மையுள்ள புத்திரன். கைம்மாறு கருதாது உதவி செய்கின்ற குணமே நாம் பெறுதற்கரிய பெரும் பொருள். பட்டம் பதவி உணவு உடையென்று ஓடி ஆடித் திரிவது தவறானது என்று புகட்டித் திருப்பும் நமது அறிவே துணைவன். ஆங்காரமில்லாத செயலே நண்பன். தீயவைகளைத் தீண்டாத சுத்த மனமே ஏவலாள். வருதல் போகுதல் இல்லாத இடமே நமது இருப்பிடம் என்றிருந்த வள்ளலார்க்கு அவர் மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்த ஒரு அடியவரின் பிடிவாத ஆலோசனையாலும், தாயும்தமையனும் வலியுறுத்தலினாலும் தமக்கை மகள் தனக்கோட்டியைத் திருமணம் செய்து வைக்கப் படுகிறது.

இராமலிங்கரைப் பள்ளியறைக்குட்படுத்தியபோது, கீழ்ப் பறவை சாதிகளும், வேட்டமுறும் பொல்லா விலங்குகளும், கேட்டால் ஞான நாட்டமடையச் செய்யும் வல்லமை பொருந்திய திருத் தணிகைப் பதிகத்தைப் பள்ளியறையுள் விடியளவும் படித்துக் கொண்டேயிருந்தார். தனக்கோட்டியும் செவிமடுத்து, உலகியலை மறந்து ஞான நாட்டத்தில் மூழ்கிக் கொண்டிருந்தது, இரவு தனது விரிந்த செயலை ஒடுக்கிக் கொண்டு வெய்யருளத்தே புகுதப் புறப் பட்டுக் கொண்டிருந்தது. கதிரவனும் ஒளிவீசி கவினுலகை மகிழ் விக்க வருகைதர ஆயத்தமாகிக் கொண்டிருந்தான், இராமலிங்கரும், அவன் படிப்பித்தவாறு பள்ளிக்குள் பாடிப் படித்ததை முடித்துக் கொண்டு மணத்தை மூடி மறைத்து முக்காடிட்டதை விளக்க முக்காடு இட்ட வண்ணம், வெளியில் புறப்பட்டவர், வீட்டை விட்டேயும் பின் சென்னையை விட்டேயும் புறப்பட்டார்.

பள்ளியறைக்குள் நடந்த செயலை தனக்கோட்டி மூலம் தெரிந்து கொண்ட அனைவரும், இராமலிங்கர் உலகியல் நாட்டத்தில் இல்லை நாம் தவறு செய்து விட்டோம் என்றும் தெரிந்து கொண்டனர். ஆயினும் செய்வதறியாது திகைத்து, இனி வள்ளலாரை நம்மவர் களால் திருப்ப முடியாது, படறக் கொம்பில்லாது தவித்த இளங் கொடிக்கு ஒரு கொம்பு கிடைத்தும், அது படற முடியாது விலகு

வதை இறைவனும் சம்மதியான். இறைவனுக்கு இச்செய்தி எட்டும் வகையில் உண்டிசுருக்கித் தவத்தில் திளைத்தால் அந்த இறையவனே இராமலிங்கரைத் திருப்பித் தனக்கோட்டியோடு வாழச் செய்வான் என்று அனைவரும் கூறிய ஆலோசனையின்படி, தனக்கோட்டி படிப் படியாக அல்லாது திடீரென உண்டி சுருக்கித் தவத்தில திளைக்க. உடல் சுருங்கி உயிரடக்கம் கொண்டார் என்று செவிவழிச் செய்தி கள் கூறிக் கொண்டிருக்கிறது. இது பற்றிய ஆதாரமான செய்திகள் எதுவும் இல்லை.

அழகிய சென்னை நகரில் உள்ள பெண்களில் பலர், கவின்மிகு கட்டழகு வாய்ந்த கன்னியர்கள், கணவனோடிருப்பவர்கள், கணவனை யிழந்தவர்கள், இவர்களில் அறிவுள்ளவர், செல்வமுள்ளவர் ஆற்ற லுள்ளவர்கள் என்னைத் தனித்தனியாக சந்தித்துப் பேசியும், சைகைகள் காட்டியும், சரச வார்த்தைகள் உரைத்தும், கைபிடித்து இழுத்தும் மேல் விழுந்தும், பொய் கரைந்து ஆணை புகன்றும், பொருள் முதலியது கொடுத்தும், வலியுறுத்தி அழைத்தும் அவர்களது மய்க்க வலையில் சிக்காதிருந்த என்னை, திருமணம் என்ற பெயரில் மாங்கல்யம் சூட்டும்போது ஒரு பெண்ணைத் தொடச் செய்தது, அடியேன் முன் செய்த தீவினையா? அல்லது நின்னை முன் வைத்து முடிவு செய்யாது, நானே திருமணம் வேண்டாம் என்று செய்த முடிவை மாற்றவேண்டும் என்பது நினது அருட்செயல் முடிவா? என்பது தெரியவில்லை. ஆனால் அப்பெண்ணைத் தொட்டனன் அன்றி கலக்கவில்லை, யென் பதை ஒரு பாடலில் வலியுறுத்துவர் வள்ளலார்.

முனித்தவெவ் வினையோ நின்னருட் செயலோ
 தெரிந்திலேன் மோகமே லின்றித்
தனித்தனி ஒருசார் மடந்தையர் தமக்குள்
 ஒருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்
குனித்தமற் றவரைத் தொட்டனன் அன்றிக்
 கலப்பிலேன் மற்றிது குறித்தே
பனித்தனன் நினைத்த தோறும்உள் உடைந்தேன்
 பகர்வதென் எந்தைநீ அறிவாய்.

சுந்தரர் உலகியல் வாழ்வு நடத்தத் திருமணம் செய்து கொள்ள முயன்றபோது, நீ திருமணம் செய்து கொண்டு பெண்களுக்குத் தொண்டு செய்வதைத் தவிர்த்து யெனக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று உமது முதாதையர் ஓலை எழுதித் தந்தனர் என்று, படி ஓலையையும். மூல ஓலையையும காட்டித் தடுத்து ஆட்கொண்டது போல, நான் திருமணம் செய்து கொண்ட போது தடுத்தாட்கொள்ள நீ ஏன் வரவில்லை. நீரல்ல நினது கணங்களில் ஒன்றாவது தடுத்தாட் கொள்ள இன்று வருமானால், செய்ததன்றி இன்னுமொரு திருமணம் செய்து கொள்வேன், என்று, மறுமணம் கூடாது என்று நமக்கெல்லாம் மதியூட்டிய இராமலிங்கர் மறுமணம் செய்து கொள்வதாக அறிவிக் கிறார்.

முன்மணத்தில் சுந்தரரை முன்வலுவில் கொண்டதுபோல்
என்மணத்தில் நீவந் திடாவிடினும்—நின்கணத்தில்
ஒன்றும் ஒருகணம்வந் துற்றழைக்கில் செய்ததன்றி
இன்னும் ஒரு மணஞ்செய் வேன்.

## இறைவன் இராமலிங்கருக்கு செய்து வைத்த திருமணம்

மகனே நீ அருள் கிடைக்கவில்லையென்று கலங்காதே. கவலை கொள்ளாதே, எப்போது எங்கே என்ன என்று மயங்காதே, சோர்ந்து தூங்காதே, எழுந்திரு, இப்போது காலை நேரம், சிகையலங்காரம் செய்து கொண்டு. தூய நீராடி, ஆடை ஆபரண அலங்காரமும் செய்து கொண்டு மணக்கோலம் எனும் மங்கலக்கோலம் புனைந்து கொள். அம்புவிவானம் அறிய. உம்பரும் வம்பரும் வியப்ப அருள் ஒளியெனும் திருமகளை நினக்கு ஏவல் புரிய இரண்டரைக் கடிகை (இரண்டரை நாழிகை) யில் உரிமையாக்கும் திருமணம் செய்து வைத்து விடுகிறேன். நீ எண்ணியபடியெலாம் உலகில் மகிழ்வோடு விளையாடலாம் என்று சொன்னதாக பத்து பாடல்கள் பகரும். அதில் ஒரு பாடல்.

தூங்கலை மகனே எழுகநீ விரைந்தே
தூயநீர் ஆடுக துணிந்தே
பாங்குற ஓங்கு மங்கலக் கோலம்
பண்பொடு புனைந்துகொள் கடிகை
ஈங்கிரண் டரையில் அருள்ஒளித் திருவை
எழில்உற மணம்புரி விப்பாம்
ஏங்கலை இதுநம் ஆணைகாண் என்றார்
இயன்மணி மன்றிறை யவரே.

## இராமலிங்கர் இறைவனிடம் கொண்ட காதல்

இராமலிங்கர், தன்னை ஒரு பெண்ணாகவும், இறைவனை ஒரு ஆணாகவும் எண்ணி அவருக்கு மாலையிட மனதில் நினைத்து, திருத்தணிகை முருகன் மீது காதல் கொண்டு, அது காட்சிப் பொருள் என்று கைவிட்டு, திருவொற்றித் தியாகன் மீது காதல் கொண்டு, அவரும் உண்மையானவர் அல்ல என்று அறிந்து ஏமாந்து தோல்வி யடைந்தவர் தில்லை நடராசர் மீது காதல் கொள்கிறார்.

தெருளாத பருவத்தே தெருட்டி மணம் புரிந்த சீராளர், யாருக்கும் கிடைக்காத அருளமுதம் அளிப்பன் என்றே அன்று மணம் புரிந்த அருளாளர், பண் படைத்தயெனை அறியா இளம்பருவந்தனிலே பரிந்து வந்து மாலையிட்ட பண்பாளர், ஊன் மறந்த உயிரகத்தே ஒளி நிறைந்தவர், பால் மறந்து விளையாடும் சிறிய இளம் பருவமதில் கைபிடித்து கங்கணம் கட்டிய கருணை வடிவர், தெருவதிலே சிறு கால் வீசி விளையாடச் சென்ற அந்த பருவத்திலே மாலையிட்டு மணம் புரிந்த மணவாளர், காமாலைக் கண்ணர்பல பூமாலை விழைந்தார். கணங் கொண்ட கண்ணர் பலர் மணங் கொள்ளத் திரிந்தார், பொருத்தமிலார் எல்லாரும் விழித்திருந்தார், பொய் பிடித்தார் எல்லாரும் புறத்திருந்தார், நான் போய் பொது நடங்கண்டுளங் களிக்கும் போது மெய் பிடித்தாய் வாழிய நீ சமரச சன்மார்க்கம் விளங்க உலகத்திடையே விளக்குக என்றெனது கைபிடித்தார், நானும் அவர்கால் பிடித்துக் கொண்டேன், களித்திடுக இனி உனை நாம் கைவிடோம் என்று மைபிடித்த விழியுலகர் எல்லாரும் காண மாலையிட்டோம் என்றெனக்கு மாலையிட்டவர்.

உருத்திரர்கள் ஒரு கோடி, நாரணர் பல கோடி, உறுபிரமர் பல கோடி இந்திரர் பல கோடி, பெருத்த மற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும் பேசில் அனந்தகோடி ஆங்காங்கே கூடி, நடங் காணாத திருச்சபையின்படி புறத்தே தியங்கி நின்றார். பாருலகாதிபர், புவனாதிபர், அண்டாதிபர், பதிரண்டாதிபர், வியோமாதிபர் முதலிய அதிபரெல்லாங் கூடி நடங்காணாது திருச் சபையின் திருப்படிக்கீழ் விழித்து நின்றார், நிற்க.

இவ்வுலகில் எனைப்போல்வார் ஓரனந்தங்கோடி, என்னில் உயர்ந்திருப்பவர்கள் எத்தனையோ கோடி - அத்தனை பேர்களும் அந்தோ நிற்கவே வருந்திடவும். அருமபெருஞ்ஜோதியர் யென்னை விரும்பி மணம் புரிந்தவர். அறிதோ வருகின்றேன் என்று போனவர், யார் செய்த தடையோ வாவில்லையென்று வருந்தி நிற்கின்றார்.

எணங்குறியேன் இயல்குறியேன் என்பாட்டுக்கிருந்தேனை அவரே வலிந்து மணங்குறித்துக் கொண்டவர், மணம் புரிந்த போது கண்ட திருமுகத்தை மற்றுமொரு நாள் காணவில்லை. ஒருவரை மணந்து வேறு ஒருவரை விரும்பும் உலகமடவார் போல நான் வேறு ஒருவரையம் விரும்பவில்லை. கொம்பில்லாத இளங்கொடிபோல் தளர்வதை யெய்து கொழுநர் எண்ணுவாரா? கற்புடைய மங்கையாயிருந்தும் கணவன் கைநழுவ விடுவதுபோல் விடுவாரா? என்று கலங்கிப் புலம்பிக் கொண்டிருக்கிறாள் அந்த அருளரசி.

பரையென்னும் சத்தியென்ற தாய் இறைவனிடம் தூது செல்கிறாள். இறைவனைக் கண்டு, அருளாளரே யெனது திருமகள், கரவறியா அம்பலத்தென் கணவரைக் கண்டது, கண் தூங்கிலேன், உண்டி கொளேன். களித்தமரேன என்பாள், இரவறியாள், பகலறியாள், எதிர்வருகின்றவரை இன்னவரென்றறியாள். உமது வரவை எதிர்பார்த்து உழல்கின்றாள். இவள் அளவில் உமது மனக்கருத்தின் வண்ணம் எதுவாய் மலர வேண்டும்.

தத்துவரும் தத்துவஞ்செய் தலைவர்களும் பிறரும் தனித்தனியே வலிந்து வலிந்து அவள் எதிர்நிற்கின்றார்கள், என்றாலும் என் துணை

யும் மற்றவரை ஏரெடுத்துப் பார்க்கவில்லை. என்னுயிர் நாயகனே யென உம்மையே யெண்ணி இருவிழிகளில் நீர் வடிக்கின்றாள். உத்தமரே இவள் அளவில் உமது சித்தம் எதுவாய் மலரவேண்டும். ஊராசை பேராசை உற்றவர் பெற்றவர் ஆசை ஒன்றுமிலாள், உமது பேராசை பேய்பிடித்தாள், கள்ளுண்டு பிதற்றும் பிச்சியெனப் பிதற்று கின்றாள். பிறர் பெயர் கேட்டிடிலோ நாராசஞ் செவியில் புகுந்தது போல நலிகின்றாள், நித்தியமாமணிமன்றில் நிகழ் பெரிய துரையே நங்கையிவளளவில் நீராசைப் பட்டதுண்டா வாய்மலர வேண்டும் என்று வேண்டுகின்றாள் அத்தாய்.

இறைவன் வருகைதர எண்ணுகிறான். இதனை இராமலிங்கர் எனும் அருளரசிக்கு நாத ஒலி மூலம் அறிவிக்கின்றான். இதனை அருளரசி தோழியிடம் கூறுகிறாள்.

துரிய பதங்கடந்த பெருஞ்ஜோதி வருகின்றார், சுகவடிவந்தர உயிர்க்குத் துணைவர் வருகின்றார். பெரிய பிரமாதியர்க்கும் அரியர் வருகின்றார், பித்தர் என மறைபுகலும் சித்தர் வருகின்றார் என்று திருநாதவொலி இசைக்கின்றதம்மா. உரிமை பெறுமென் தோழி நீயுமிங்கே சின்ன ஒலிகேட்டுக் களித்திடுவாய் உளவாட்டமறவே என்று தோழியிடம் கூறுகிறாள் அத்தோகை.

அரசு வருகின்றதென்றே சொல்லுகின்றேன். நீதான் அசையாதே உற்றுக்கேள் தோழி, முரசு சங்கு வீணையெனும் நாதவொலி முழங்குகிறது. தெய்வமணம் வீதியெங்கும் வீசுகிறது நாசியுயிர்த் தறிக, அருட்ஜோதி விளையாடல் காணலாம். ஆனந்தமடையலாம்.

நினது கணவர் பேர் என்ன என்று வினவுகிறாள் தோழி. அவர் பெயர் அருகர் புத்தர். நாராயணர். அரன். ஆதிசிவன். சதாசிவம், பிரமம். பரமம், பரப்பிரமம். துருவு சுத்தப் பிரமம். துரியநிறை, சுத்தசிவம் எனப் பல பெயர்கள் உண்டு. நினது பதியின் அதிகாரத்தின் எல்லையெது? சிற்சபைக்கே உரிய தனிப்பதி. கனகசபாபதி, வான் பன்னியருக்கு அருள்புரிந்த பதி, உலகமெலாம்

படைத்தபதி, காத்தருளும் பதி, எவ்வுயிர்க்கும் அன்னியமல்லாது அசைத்தும் உறத்தும் அருட்செங்கோல் செலுத்துகின்ற அதிபதியெனச் சொல்லுகிறாள் அருளரசி.

அம்மா நினது கணவரைப் பற்றிப் பெருமையாய் சொல்லுகிறாய். அவர் கூத்தாடி, எங்கு பார்த்தாலும் இரவு பகலில்லாது ஆடுவாராம், கூத்தாடிக்கு மாலையிட்டாய் எனக்குறைவாய் பேசுகிறார்கள அம்மா. குலமறியார் புலமறியார் அம்பலத்தே நடிக்கும் கூத்தாடி ஐயருக்கே மாலையிட்டாயெனவே புலமறியார் போல் நீயும் பொல பொலவென்று அளப்பதெல்லாம் போகவிட்டு இதுகேள். அலகறியா திருக்கூத்து என் கணவர் புரியவில்லையென்றால், அயன் அரி அரனோடு ஐவர்களும் பிறரும், விலகறிய உயிர் பலவும் நீயும் இங்கே நின்று மினுக்குவதும் குலுக்குவதும் வெளுத்துவிடும் காணே, அதுமட்டுமல்ல, படி இடத்தே வானிடத்தே பாதலத்தே அண்ட பகிரண்ட கோடியிலே பதிவிளக்கம் எல்லாம், அடிமலர் கொண்டு ஐயர் செய்யும் திருக்கூத்தின் விளக்கம் ஆகும். இது சத்தியம் என்று அருமறை ஆகமங்கள் எல்லாம் கெடியுறவே பறையடித்துத் திரிகின்றது அவற்றைக் கேட்டறிந்து கொள்வாய் நின் வாட்டமெலாம் அறவே, என்று சொல்லுகிறாள் அருளரசி.

தோழி! யெனது கணவர் காலையிலே வருகின்றோம் என்று கூறினார். அவராணை அருளாணை அவசியம் வருவார். நீ மணி மாடவாயில் முகப்பெல்லாம் தோரணம், கொடிகள் பழுத்தகுலை வாழை கமுகு, கரும்பு தெங்கிளநீர், நிறைநீர்க்குடம், இணைந்த கப்பல் கண்ணாடி கவரிமுதல் உண்ணாடியிடுக, மலரணையென்னும் மணிமேடையை நான் அலங்கரிக்கின்றேன், நீ ஆயிரமாயிரங்கோடி அணி விளக்கு ஏற்று. அந்த விளக்கில் பசு நெய்யே யிடு, மற்றை செய்யிட்டால், மதி கதிர் செங்கனல் இவை மூன்றுங்கூடினாலும் திணையாகாத அவரது திருமேனியை அது மாசுபடுத்தி விட்டாலும் விடுக. காலையில் இருள் இல்லையே விளக்கு அவசியமாயென்று கேட்காதே, இருளும் இல்லைதான், அவரது வடிவமும் ஒளிதான், என்றாலும் மங்கலமாய் ஏற்றிவை.

இளைப்பு வரும், பணிபுரியும் போது களைப்பு வரும், சாப்பிடு கொஞ்சம் சாப்பிடு யென்று அடிக்கடி அழைக்காதே, ஓங்கு நில

மண்டபத்தேயென் கணவருடனே உவட்டாத தெள்ளமுதம் உண்டு பசி தீர்ந்தேன்; பசிவந்தால் நான் அப்போது சொல்லுகின்றேன் நீ இப்போது அடிக்கடி அழைக்காதே. அப்படியானால் கொஞ்ச நேரமாவது தூங்கு என்கிறாய், எனது துரை வரும் ஓர் தருணம் இதில் தூக்கம் வருமா? உனக்கு தூக்கம் வருவதால் என்னை தூங்கச் சொல்கிறாய் நீ புறத்தே போய் தூங்கு யெனது கணவர் வந்தவுடனே அவரும நானும் கலந்து ஒன்றான பின்னர் உனை எழுப்புகின்றேன. என்கிறாள் அருளரசி.

தோழி உலகமடவார் காலையில் கணவனோடு கூட நாணுவர் என்கின்றாய் கணவனிடத்து அன்பில்லாத பெண்களுக்கே நின்னுரை சம்மதம், ஆசை வெட்கமில்லாது, கணவன் வரும்போது துன்பறியா காலையென்றும் மாலை யென்னும் தோன்றாது சுகம் ஒன்றே தோன்றும். அதுமட்டுமல்ல இந்த உலகவர் இருள் இரவிலே, இருட்டு அறை யிலே, கண்களையும் கட்டி மறைத்துக் கலக்கின்றார் கணச்சுகமும் அறி யார், காலையிலே யென் கணவரோடு கலப்பேன அந்த சுகத்தைச் சொல்ல யார் வல்லவர்.

காலையிலே யெனது கணவர் வருகிறார் என்று சொன்னேன். நீ காதில் விழாதவள் போலவும், வேலையிலாதவள் போலவும் வம்பளக்கின்றாய், நீ சோலையிலே மலர் கொய்து தொடுத்து வந்தே புறத்தே சூழ்ந்திரு, இனித்த சுகம் பெறவே நான் தனித்திருக்க வேண்டும். விடிந்தது பேராணவமெனும் காரிருள் நீங்கியது வெய்ய வினைத்திரள் எல்லாம் வெந்தது, மாயை ஒடிந்தது, மாமாயை ஒழிந்த திரை தீர்ந்தது. இனித் தலைவர் தருணம், கற்பூரம் கொண்டுவா அவருக்குக் கண்ணேறு கழித்தல் வேண்டும் என்கிறாள் அருளரசி.

தனித் தலைவர் வருகின்ற தருணமிது தோழி தனிக்க எனை விடு நீயும் தனித்தொருபாலிருந்து. இனித்த சுவைத்திரள் கலந்த திருவார்த்தை கேட்டு உளங்களிக்கலாம் என்று சொன்னீர். அதுபடி உன்னையும் தனியே விட்டு நானும் தனியே இருந்தேன், இனிய வார்த்தை எனது செவியில் படவில்லையே, மணவாளர் வந்தாரா? மலரணைமேல் அமர்ந்தாரா? நின்னைக் கூடினாரா? யென்று வினவு கின்றாள் அத்தோழி.

தோழி மனைக்குவந்து, மலரணையில் அமர்ந்து யெனையணைந்த போது, மணவாளர் வடிவு, எனது வடிவுயென்று பிரித்து அறிய முடியவில்லை. தினையளவுகூட விகற்ப உணர்ச்சியில்லை, அது வாய் கொண்டு உரைக்க முடியாது என்றாள் அருளரசி.

நீ சொல்லுவதை எப்படி நம்புவது என்று சொல்லுகின்ற தோழியைப் பார்த்து அருளரசி சொல்லுகின்றாள். கற்பூரம் மணக்கின்றது எனது உடம்பு முழுதும், கணவர் திருமேனியிலே கலந்த மணம் அதுதான். எல்லாவித மணம் போல மறைவதில்லை, இயற்கை மணம் துரிய நிறை இறைவடிவத்துளது என்று விளக்குகிறாள் அருளரசி.

## ஓங்காரம்

ஓம் என்பது பிரணவம், அனைத்திற்கும் அதுவே காரணம் என்றும் கூறுவர். இராமலிங்கரோ, ஓம் என்ற வரம்பைக் கடந்து அந்நிலையில் அமர்ந்து இருக்கின்றார். அப்போது இறைவன் வருகிறான், உடனே எழுந்து வணங்குகிறார், எழுந்திருக்கவேண்டாம் நீ அந்நிலையிலே இரு, ஆனால் இருக்கிறோமென்ற ஆணவத்தை ஒழித்து விடு என்றார், உடனே ஒழித்தார் அவரும் இவரும் ஒன்றாகி விட்டாராம். நாம் எவ்வளவு மேல்நிலையடைந்தாலும், நாம் உயர்ந்தோமென்ற ஆங்காரம் ஒட்டிக்கொண்டே வரும். அவனுக்கும் நமக்கும் இடையிலே தடையாக இருப்பது ஆங்காரந்தான். பிரிந்தோரிடத்தில் இராமலிங்கர் பேசும்போது, வான் காணவில்லை. மறை காணவில்லை, மலரோன் காணவில்லை, மால் காணவில்லை உருத்திரனும் காணவில்லை. இத்தனை பேரும் காணாத கடவுள் எங்கே உள்ளான் என்றால் "நான் காணா இடத்தில் அவனைக் காணலாம் என்று நல்லோர்கள் சொல்கிறார்கள் என்பர்".

ஓங்கார அணைமீது நான்இருந்த தருணம்
உவந்தெனது மணவாளர் சிவந்தவடி வகன்றே
ஈங்காரப் பனிக்குவடி வெடுத்தெதிரே நின்றார்
இருந்தருள்க எனஎழுந்தேன் எழுந்திருப்ப தென்நீ

ஆங்காரம் ஒழிஎன்றார் ஒழிந்திருந்தேன் அப்போ
தவர்நானே நான்அவரோ அறிந்திலன்முன் குறிப்பை
ஊங்கார இரண்டுருவும் ஒன்றானேம் ஆங்கே
உறைந்தஅனு பவம்தோழி நிறைந்தபெரு வெளியே.

ஓங்கார நிலை யொன்றுண்டு, அதன் மேல் ஒரு நிலையும் உண்டு. அதன் மேல் உயர்ந்த தனி நிலையும் உண்டு, அந்நிலையில் இராமலிங்கரை இறைவன் ஏற்றுவித்து, பிற பதத்தலைவர்களாலும் மதத்தலைவர்களாலும் போற்றக்கூடிய சித்திகளையெல்லாம் அவன் தந்தான் என்பதைக் கீழ்வரும் பாடலால் விளக்குவர்.

ஆங்காரம் தவிர்ந்தவருள் ஓங்காநின் றவனே
அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே
ஓங்கார நிலைகாட்டி அதன்மேல்உற் றொளிரும்
ஒருநிலையும் காட்டிஅப்பால் உயர்ந்ததனி நிலையில்
பாங்காக ஏத்திஎந்தப் பதத்தலைவ ராலும்
படைக்கவொணாச் சித்தியைநான் படைக்கவைத்த பதியே
தூங்காது பெருஞ்சுகமே சுகித்திடஇவ் வுலகைச்
சுத்தசன்மார்க் கந்தனிலே வைத்தருள்க விரைந்தே

வறுமையில் சிக்கித் தவித்த கந்தசாமி யென்பவர். தனது வறுமை தீர, உதவும்படி செல்வந்தர்கட்கு சீட்டு எழுதித்தரும்படி வேண்டுகிறார் இராமலிங்கரை. கேட்டாலும் என்னையுடையவனன்றி என்னை வெட்டிப் போட்டாலும் மற்றவர்களைக் கேட்கமாட்டேன என்பதை ஒரு பாடல் மூலம் விளக்குகிறார். அப்பாடல் இதோ.

ஏட்டாலுங் கேளயல் என்பாரை
நான்சிரித்து என்னைவெட்டிப்
போட்டாலும் வேறிடம் கேளேன்என்
நாணைப் புறம்விடுத்துக்
கேட்டாலும் என்னை உடையான்

இடஞ்சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
சொல்லி நிறுத்துவனே.

பொன்னேரி சுந்தரனார், தனது வறுமை தீர வரமருளும்படி இராமலிங்கரிடம் வேண்டி விண்ணப்பிக்கின்றார். இன்னும் ஓரிரு நாளில் நாமிருவரும் தில்லை சென்று நமது இருவருடைய குறைகளையும் தவிர்த்து அருளும்படி இறைவனிடம் முறையிடலாம் என்பதை விளக்கும் ஒரு பாடலை எழுதித்தருகின்றார். பாடல் இதோ.

திருவோங்கு பொற்சபையும் சிற்சபையும்
நம்பெருமான் செய்யா நின்ற
உருவோங்கும் ஆனந்தத் தாண்டவமும்
கண்டினிதாங் குறைக யானும்
தருவோங்கு தில்லைநகர்க் கோரிருபால்
நாள்வரைக்குட் சார்கின் றேன்நம்
இருவோங்கள் குறையும்இறைக் குறைத்தகற்றிக்
கொளலாம்நீ இளையேல் ஐயா.

# இராமலிங்கரை இறைவன் தண்டித்தல்

இறைவன் நமது உடலை உருவாக்கி, அதில் உயிரைக்குடி வைத்து அந்த உயிருக்கு உறுதுணையாக பிறதத்துவங்களையும் வைத்து, அந்த உடல் நிலைபெற புற உணவு தானியங்களையும், அக உணவு உள்ளத்தில் அமுதபாகுகளையும் அமைத்து, அந்த உயிருக்கு இடையூறு வராதவண்ணம் இரவு பகலாக மெய்க்காவல்புரிந்து வருகிறான் என்பதற்காக நாம் உண்ணும் போது அவனை எண்ணி உண்ண வேண்டும் என்பர். இதனால்தான் உண்ணுவதற்கு முன் மந்திர எழுத்துக்களை உச்சரிப்பதும், உணவு படைத்த இலையை சுற்றி நீர் தெளிப்பதும் செய்வதை உலகில் எங்கும் காணலாம் நாம் மந்திர எழுத்துக்

களை உச்சரியா விடினும், இலையை சுற்றி நீர் தெளியாவிடினும், அவனை எண்ணியாவது உண்ணவேண்டும் என்பது நமது கடமை.

தவறாது அவனை எண்ணி உண்டுவந்த இராமலிங்கர் ஒற்றியில் ஒருநாள் அவனை எண்ணாமல் உண்டு, பின்பு அவனைத் தொழ எண்ணினார், இதனால் இறைவன் இராமலிங்கரைத் தண்டித்தான. என்று பத்து பாடலில் பகருவார் இராமலிங்கர். அதனால் தண்டனை என்பதை விளக்க வில்லை "தசையெலாம் நடுங்க ஒற்றியில் உன்னால் தண்டிக்கப்பட்டனன் அன்றே" என்று விளக்குவார் அதிலொரு பாடல் இதோ.

முறைப்படி நினது முன்புநின் றேத்தி
முன்னிய பின்னர்உண் ணுமல்
சிறைப்படி வயிற்றில் பொறைப்பட ஒதிபோல்
சென்றுநின் முன்னர்உற் றதனுல்
கறைப்பட ஓங்கும் கண்டனே எவர்க்கும்
கருத்தனே ஒருத்தனே மிகுசீர்
தறைப்படர்ந் தோங்கும் ஒற்றியில் உன்னுல்
தண்டிக்கப் பட்டனன் அன்றே.

இராமலிங்கர் சிறு வயதாக இருந்தபோதே, இவரது தாயிடத்தில், இவாது முன்னிலையில், அடுத்த ஒரு தாய் ஏதோ நான்கு அளித்து இருக்கிறாள். பிரிதொரு நாள் அதனைத் திருப்பித்தரும் போது இரண்டுதான் என்று கூறினாள் இராமலிங்கரின் தாய். நான்கு என்று அடுத்தத் தாய் வாதிட்டார். இல்லை என் மகன் இராமலிங்கனுக்கு இரண்டுதான் என்பது தெரியும் என்று சொல்லிவிட்டு, வீட்டினுள் வந்து இரகசியமாக இராமலிங்கனிடம், நீ நான்கு என்று சொல்லாதே. இரண்டு என்று சொல்லு என்று சொல்ல, இராமலிங்கரும் வந்து நான்கல்ல, இரண்டுதான் என்று உறுதி சொல்ல, வாதிட்ட அத்தாய் வழியில்லாது ஏற்று அமைதியுற்றாள். பிறகு அதனை நினைத்து இராமலிங்கர் வாய்மொழியில்லாது தூயமொழி புகன்றேன், தூய்மொழியில்லாது பொய் மொழி புகன்றேன் என்று வருந்திப் பிள்ளைப்பெரு விண்ணப்பத்தில் விளக்கியிருக்கிறார். அப் பாடல் இதோ.

தாய்மொழி குறித்தே கணக்கிலே மற்றோர்
தாய்க்குநால் என்பதை இரண்டாய்
வாய்மொழி வஞ்சம் புகன்றனன் வரைந்தேன்
நடுங்கினேன் நினைத்ததை மனத்தே
தூய்மொழி நேயர் நம்பினோர் இல்லில்
சூழ்ந்தனன் நினைத்தது துயர்ந்தேன்
சாய்மொழி புகன்றேன் பொய்மொழி புகன்றேன்
கலங்கினேன் அதுநினைத் தெந்தாய்.

சபாபதி என்பவருடைய திருமணத்திற்கு இராமலிங்கரை வலியுறுத்தி அழைத்துச் சென்றனர். அங்கே விருந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. எளியவர்கள் எல்லாம் வெளியில் நின்று நாம் விருந்துண்ணத்தக்கவராக, கோட்டும் பூட்சும், வீடும் வீராப்பும், பட்டமும் பதவியுமில்லாதவர்களாக இருக்கிறோமேயென்று வருந்துவதைக் கண்டு இவரும் வருந்தி கீழ்வரும் பாடலைப் பாடுகிறார்.

சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காய் இல்லைநல்ல சோமனில்லை
பாடில்லை கையில் பணமில்லை தேகப் பருமன் இல்லை
வீடில்லை யாதொரு வீறுப்பும் இல்லை விவாகமது
நாடில்லை நீநெஞ்ச மேஎந்த வாறினி நண்ணினையே.

இப்பாடலைக் கேட்டவர் அனைவரும் வருந்தினர். வலியவருடன் எளியவரும் விருந்துண்ணச் செய்தனர். உலகவர் நிலையை மேலும் இரு பாடல் மூலம் விளக்குகிறார் இராமலிங்கர்.

காயார் சரிகைக் கலிங்கம்உண் டேல்இக் கலிங்கம்கண்டால்
நீயார்நின் பேர்எது நின்ஊர் எதுநின் நிலையெதுநின்
தாயார்நின் தந்தை எவன்குலம் ஏதென்பர் சாற்றும்அவ்வல்
வாயார் இடஞ்செல்ல நெஞ்சே விடைதர வல்லை அன்றே.

நேரா அழுக்குத் துணியாகில் உன்றனை நேரில்கண்டும்
பாராத தவர்என நிற்பார் உடுத்தது பட்டெனிலோ
வாரா திருப்பதென் வாரும்என் பார்இந்த வஞ்சகர்பால்
சேராது நன்னெஞ்ச மேஒற்றி யூரனைச் சேர்விரைந்தே.

## தில்லையில் இராமலிங்கர்

ஒற்றித் தியாகன் தனக்கு உதவாது கைவிடுவான் என்பது அறிந்தோ என்னவோ, ஒற்றித் தியாகனை வேண்டும் ஒரே பாடலில் தில்லை நடராசரையும் வேண்டுகிறார். திருமணமானபின் உறவினர்கள் அடுத்து அடுத்து அழைத்து தொல்லை தந்திருக்கலாம்' அத்துடனும், கந்தகோட்டப் பாடலில் சென்னையைச் சிறப்பித்து பாடியவர். அதே சென்னையில் ஆடம்பரமான, ஆரவாரமான நடைமுறைகள் அமைதிக்கு இடமில்லையெனவும் சென்னையைவிட்டு தில்லையை நாடுகிறார்.

தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்
சிறுகுறும் என்னுளம் பயந்தே
நாட்டிலே சிறிய ஊர்ப்புறங் களிலே
நண்ணினேன் ஊர்ப்புறம் அடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செயக்
களத்திலே திரிந்துற்ற இளைப்பை
ஏட்டிலே எழுதவும் முடியுமோ இவைகள்
எந்தைநீ அறிந்தது தானே

சகப்புற வாழ்வைப் பார்த்திடில் கேட்கில்
சஞ்சலம் உறும்எனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்கும் தோட்டங்கள் தோறும்
நண்ணியும் பிறவிடத் தலைந்தும்
பகற்பொழு தெல்லாம் நாடொறுங் கழித்தேன்
பகலன்றி இரவும் அப்படியே
மிகப்பல விடத்தும் திரிந்தனன் அடியேன்
விளம்பலென் நீஅறிந் ததுவே.

இவர் தில்லை வந்தது 1849 ஆம் ஆண்டு என்பர் தொழுவூர் வேலாயுதம். தாய் முதலாரோடு சிறுபருவத்தில் தில்லை வந்த இராமலிங்கர், சென்னையை விட்டு வருவதற்கு முன் ஒருமுறை வந்திருக்க வேண்டும் என அவரது பாடலின் மூலம் தெரிகிறது.

தில்லையிலுள்ள சிவகங்கைப் படியில் இராமலிங்கர் இருந்தாராம், தவறி நீரில் விழுந்தாராம், எடுத்து கரையேற்றுவார் இல்லாது இறைவனே வந்து எடுத்து கரையில் விடுத்தாராம். அவரது கரத்தில் பொற்கங்கணமும் கட்டினாராம். இராமலிங்கர் சிவகங்கை நீரில் வீழ்ந்து வெளியில் எடுத்து வந்தபோது. அந்தநீர் அவரது உடையையும் நனைக்கவில்லையாம், உடலையும் நனைக்கவில்லையாம், என்று அவரே சொல்வதை காண்போம்.

மேலைப் பாற்சிவ கங்கை என்னுமோர் தீர்த்தம் தன்னையே
மேவிப் படியில் தவறிநீரில் விழுந்த என்னையே
ஏலத் துகிலும் உடம்பும் நனையா தெடுத்த தேஒன்றே
எடுத்தென் கரத்தில் பொற்பூண் அணிந்த இறைவன் நீயன்றே.

# மூன்று மெய் மொழிப் பொருள்

திருவளர் திருச்சிற்றம்பலத்திலே அந்நாள் செப்பிய மெய்ம் மொழிப் பொருள் என்பர், அந்நாள் என்பது, இராமலிங்கர் தாய் முதலாரோடு சிறுபருவத்தில் தில்லை தலத்திடையே வந்தபோதாக இருக்கலாம். அல்லது அடுத்த தடவையாக சிவகங்கை தீர்த்தத்தில் விழுந்த போதாகவும் இருக்கலாம். அல்லது இப்பாடல் பாடும் முன் சென்னையைவிட்டு வந்தபோதாகவுமிருக்கலாம்.

ஒரு மெய்ம் மொழிப் பொருளை வாக்கால் சொன்னார், அடுத்தொரு மெய் மொழிப் பொருளைத் திருமந்திரத் திருமுறையால் உணர்த்தினார். அடுத்தொரு மெய்ம் மொழிப் பொருளை அவரது உளத்திலே இருந்து காட்டினார். ஒன்றைச் சொன்னது. அடுத்ததை உணர்த்தியது. அடுத்ததைக் காட்டியது பாடல் இதோ.

திருவளர் திருவம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்மொழிப் பொருளும்

உருவளர் திருமந் திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவருள் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்.

ஆலயம் செல்பவர்கள் விரும்பியதெல்லாம் தரும்படி இறைவனை வேண்டுவா, அழுது கண்ணீர் வடிப்பது அரிது. மேலும் அருளைத்தர வேண்டுவோரும். அதற்காக அழுது நிற்போரும் அரிது அரிது மிகவும் அரிது. இராமலிங்கர். தில்லை அம்பலவாயிலின் ஒரு புறத்திலே அருளை நினைந்து அழுது நின்றாராம், முந்நாளில் அருள் தருகிறேன் என்று முகமலர்ந்து அருள்மொழி தந்தாராம். அந்த அருள் கிடைக்கும் திருநாள் எந்நாள் எந்நாள் என எண்ணி எண்ணி எதிர்பார்த்து பந்நாளும் ஓடி விட்டதாம், அது இந்நாளாகவும் இருக்கலாம் என ஏங்கியழுதாராம். உடனே அம்பலவன் தோன்றி அருளினைத் தந்ததோடு விரும்பியதைப் பின்னர் தருகிறேன் என்று பிரிந்தாராம். பாடல் இதோ.

அந்நாளில் அடிச்சிறியேன அம்பல வாயிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே அயர்ந்தழுது நின்றேன்
முந்நாளில் யான்புரிந்த பெருந்தவத்தால் எனக்கு
முகம்மலர்ந்து மொழிந்த அருள்மொழியை நினைந்துஅந்தச்
செந்நாளை எதிர்பார்த்தே பன்னாளும் களித்தேன்
சிந்தைமலர்ந் திருந்தேன்அச் செல்வமிகும் திருநாள்
இந்நாளே ஆதலினுல் எனக்கருள்வீர் என்றேன்
என்பதன்முன் அளித்தீர்நும் அன்புஉலகில் பெரிதே.

மற்றுமொருநாள் வந்து, அந்நாளில் அம்பலத் திருவாயிலிடை நினக்கு அன்புடன் உரைத்த படியே அற்புதம் விளையக்கூடிய நமது அருட்பேரொளியை அளித்துள்ளோம், இந்நாள் தொடுத்து நீ எண்ணியபடியெல்லாம் யெய்தி விளையாடி மகிழ்க. இதுமட்டுமல்ல, என்றும் இறவா நிலையில் வாழக்கூடிய இயற்கையான சுத்ததேகம்,

பிரணவதேசர், ஞானதேகம் மூன்றும் தந்ததோடு, எந்நாளும் உன் இச்சைபடி யாவும் பெற்று வாழ நாம் உனது உள்ளத்தில் புகுந்து உன்னோடு கலந்து விட்டோம், இனி எந்த வாரினும் உம்மை விட்டுப் பிரிய மாட்டோம் இது உண்மை, நமது ஆணையென்றும் ஆணையிட்டோம். இதனை விளக்கும் பாடல் இதோ

அந்நாளில் அம்பலத் திருவாயில் இடைஉனக்
 கனபுடன் உரைத்தபடியே
அற்புதம் எலாம்வல்ல நம்அருட் பேரொளி
 அளித்தனம் மகிழ்ந்துன் உள்ளே
இந்நாள் தொடுத்துநீ எண்ணிய படிக்கே
 இயற்றிவிளை யாடிமகிழ்க
என்றும் இறவாநிலையில் இன்பஅனு பவனாகி
 இயல்சுத்தம் ஆதிமூன்றும்
எந்நாளும் உன்இச்சை வழிபெற்று வாழ்கயாம்
 எய்திநின் னுட்கலந்தேம்
இனிஎந்த ஆற்றினும் பிரிவுறேம் உண்மைஈ
 தெம்மாணை என்றகுருவே
மன்னாகி என்பெரிய வாழ்வாகி அழியாத
 வரமாகி நின்றசிவமே
மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம்
 வல்லநட ராசபதியே.

சென்னையிலிருந்து 1849 ல் சிதம்பரம் வந்த இராமலிங்கர், அங்கேயே தங்கிவிட எண்ணினார், சென்னைச் சூழல் அதிகம் என்றால் சிதம்பரம் சூழல் சிறிது குறைவாக இருந்ததால் அங்கு தங்க முடியவில்லை. பிறகு கருங்குழி வந்து திருவேங்கடர் வீட்டில் தங்கி, தில்லை செல்வதும் திரும்பி வருவதுமாயிருக்கிறார். இதனை விளக்கும் அவரது கடிதம்.

"சிதம்பரம் தற்காலத்தில் நமது உயிர்த்துணைவனாகிய பெருமானைப் பற்றி நாம் போவதற்கும் இரண்டொரு தினம் இருப்பதற்கும் தக்கதேயன்றி வேறு ஒரு வகையாலும் தக்கதில்லை. அது கலி கால வண்ணம்"

அது! கலியுலகின் கால வண்ணம் என விளக்கி 20-3-1861ல் கடிதம் எழுதுகிறார் இராமலிங்கர்.

பின்னர் 1865 ல் கருங்குழி கிராமத்திலேயே சமரச வேத சன்மார்க்க சங்கம் என்ற ஒன்றைத் தோற்றுவிக்கிறார் இராமலிங்கர். இது நான்கு வேதங்கட்கும் பொதுவாக தாம் உருவாக்குவது சமரச வேதம் எனக் கொண்டார் போலும்.

பிறகு தில்லைச் சிதம்பரத் திருக்கோயிலைத் திருப்பணி செய்ய விருப்புகிறார். சமரச சங்கம் கண்ட வள்ளலார் சைவ சமயத்தார்க்கே உரித்தான தில்லைத் தலத்தைத் திருப்பணி செய்து, அனைவர்க்கும் உரித்தாக்கி, உலகறிவேதாகமத்தை ஒதுக்கி, உண்மை வேதா கமத்தில் உள்ளபடி வழிபடு முறையை அமைக்க விரும்புகிறார். அது பற்றிய அவரது பாடல் இதோ.

திருவளர் திருச்சிற் றம்பலம் ஓங்கும்
சிதம்பரம் எனும்பெருங் கோயில்
உருவளர் மறையும் ஆகமக் கலையும்
உறைத்தவா றியல்பெறப் புதுக்கி
மருவளர் மலரின் விளக்கிநின் மேனி
வண்ணங்கண் டுளங்களித் திடவும்
கருவளர் உளகில் திருவிழாக் காட்சி
காணவும் இச்சைகாண் எந்தாய்.

தில்லைத் திருத்தலத்தை இராமலிங்கர் புதுப்பிக்கும் பணிகளை மேற்கொண்டது 1866 ஆம் ஆண்டு என்று "போலியருட்பா மறுப்பு" வெளியீட்டில் குறிப்பிட்டுருப்பதாகக் கூறுவர். சாதி சமய உயர்வு தாழ்வு பேதங்களகலவும், ஏழை எளியவர் பசியகலவும், இருப்பவர் இல்லாதவர்கட்கு எல்லாவகையாலும் உதவ வழிகாட்டியாகவும். இறைவன் இரக்கம, ஈகை கருணை தயவு வடிவானவன், நாமும் அவ்வடிவானால்தான் அவனையடையலாம் என்பதை விளக்கவும். 2—2—1867ல் பார்வதிபுரத்திற்கு வந்து அதன் வடபுறத்தில் உள்ள 80 காணி நிலங்களை அவ்வூர்வாசிகளிடமிருந்து இலவசமாகப் பெற்று 23—5—1867ல் தருமச்சாலை யொன்றை தோற்றுவிக்கிறார்.

பார்வதிபுரத்திற்கு வடலூர் என்று பெயரிட்டார், அவ்வூரின் வடபுறத்திலுள்ள எண்பது காணி நிலம் பெற்று அதில் தருமச்சாலை தோன்றியது. தருமச்சாலை தோன்றியவுடன் சமரச வேத சன்மார்க்க சங்கமும் அதில் இணைந்து செயல்பட்டது. தில்லைத் திருத்தலத்தைத் திருப்பணி செய்யும் எண்ணத்தை இராமலிங்கர் கைவிட்டதாகத் தெரியவில்லை. சாலை சங்கம் திருக்கோயிலை இணைத்தே செயல்படுத்த விரும்புகிறார் என்பதை கீழ்வரும் பாடல் விளக்கும்.

தங்கமே அனையார் கூடிய ஞான
சமரச சுத்த சன்மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்
சார்ந்திருக் கோயில்கண் டிடவும்
துங்கமே பெறுஞ்சற் சங்கம் நீடூழி
துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
ஆடவும் இச்சைகாண் எந்தாய்.

சங்கஞ்சார் திருக்கோயில் என்பதை கீழ்வரும் கட்டளை விளக்குகிறது.

"சமரச வேத சன்மார்க்க சங்கமும், மேற்படி தருமச்சாலையும் மேற்படி நிலைபெற விளக்கம் செய்யும் பொருட்டாகவும், கருணை கூர்ந்து எனது தந்தையாராகிய எல்லாம் வல்ல திருச்சிற்றம்பலக் கடவுள் சமரச வேத சன்மார்க்க சங்க தருமச்சாலைக்கு எழுந்தருளி காட்சிக் கொடுக்கும் தருணம் மிகவும் அடுத்த சமீபமாகவிருக்கிறது" என்ற அவர்களது விண்ணப்பம் 30—3—1871ல் வெளியாகியது.

இதில் சாலையையும், சங்கத்தையும், தில்லைத் தலத்தையும், இணைத்தே குறிப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது. பின்னர் இந்த எண்ணம் மாறுபட்டு, வடலூரில் ஞானசபை தோற்றுவிக்கும் எண்ணம் இராமலிங்கருக்கு எழுந்தது.

சாலை, சங்கம், தில்லைக்கோயில் மூன்றும் சேர்ந்து செயல்பட வைக்க எழுந்த எண்ணம் மாறி, தில்லையை விட்டு வடலூரில் ஞான சபை தோற்றுவிக்க காரணம், தில்லை தீட்சதர்களின் வெறுப்போ

கசப்போ அல்ல, சாதியில்லை, மதமில்லை, சமயமில்லை என்ற இராமலிங்கரின் குரல் எட்டுத் திக்கிலும் எழுந்த ஒலியைச் செவி மடுத்த சநாதன வைதீக கர்த்தர்கள், இதனைக் கருதாதுவிட்டால் சைவ சமயமே அழிந்துவிடுமோயென அஞ்சி, இராமலிங்கரிடத்தில் வம்பு வழக்கு வாதப்போர்கள் நிகழ்த்த ஆரம்பித்தனர். இந்த வாதப் போர்தான் தில்லைத் திருத்தல திருப்பணியை கைவிடச் செய்து வடலூரில் ஞானசபைத தோன்றச் செய்தது என்று எண்ண இட முண்டுபண்ணுகிறது. இதனை விளக்கும் ஒரு பாடல்

வருவார் அழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தால் பெறலாம் நல்ல வரமே.

திருவார்பொன் னம்பலத்தே செழிக்குங்குஞ் சிதபாதர்
சிவசிதம் பரபோதர் தெய்வச்சபா நாதர் —வரு

சிந்தை களிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோர்எல் லாரும்தொண்டு செய்யப் பவுரிகொண்டு
இந்த வெளியில்நட மிடத்துணிந் தீரேஅங்கே
இதைவிடப் பெருவெளி இருக்குதென் றுல்இங்கே —வரு

இடுக்கி லாமல்இருக்க இடமுண்டு நடஞ்செய்ய
இங்கம் பலம்ஒன்றங்கே எட்டம் பலம்உண்டைய
ஒடுக்கில் இருப்பதென்ன உளவுகண்டு கொள்வீர்என்றால்
உண்மைஇது வஞ்சமல்ல உன்மேல்ஆணை என்றுசொன்னால்
—வரு

மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து
விளையாட வும்எங்கள் வினைஓடவும் ஒளித்து
எல்லையில் இன்பந்தரவும் நல்லசமயந் தானிது
இங்குமங்கும் நடமாடி இருக்கலாம் என்றபோது —வரு

## நீதிமன்ற வழக்கு

பள்ளிச் சிறுவர்கள் எல்லாம் "கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே" என்ற பாடலைப் பாடிக் களித்தனர், வீதியிலே பிச்சையெடுக்கும் பிச்சைக்காரர்கள் எல்லாம் "அம்பலத்தரசே அருமருந்தே" யென வீதிகள் தோறும் முழக்கினர், பக்தர்கள் எல்லாம் கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்தக் குளிர் தருவே" என்று குரல் கொடுத்தனர். இசைவாணர்கள் எல்லாம் "தெண்டனிட்டேன் என்று சொலலடி என்று இசை முழக்கம் செய்தனர், யோகிகள் எல்லாம் "வாசி நடத்தித்தருவாண்டி ஒருவாசியிலே இங்கு வருவாண்டி" பாடலை பாடிக் களித்தனர். கன்னிப் பெண்கள் எல்லாம் "கும்மியடி பெண்கள் கும்மியடி'' என்ற பாடலைப் பாடி கும்மியடித்து குதூகலித்தனர்.

ஆத்திகர் மட்டுமா? நாத்திகரும் "சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே, சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர், அலைந்து அலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே'' என்ற பாடலைப் பாடி வீர முழக்கம் செய்தனர்.

நாடெங்கும் திருவருட்பா முழக்கங்களையும். இராமலிங்கரை நாடி, பள்ளிச் சிறார்கள், படித்த மேதைகள், அரசியல் நிபுணர்கள், நீதிமன்ற பணியாளர்கள் யாவர்களையும் குழுமியதையும் கண்ட வைதிகர்களும், சைவாகம பண்டிதர்களும் இராமலிங்கர் திருவருட்பிரகாச வள்ளலார் அல்ல, அவர் பாடியது திருவருட்பாவுமல்ல. என்று எதிர்ப்புக்குரல் கொடுக்கத் தொடங்கினர். திருவருட்பிரகாச வள்ளலாரின் குழுவினரும் அதனை மறுத்து எதிர் குரல் கொடுத்தனர். இந் நிலையில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் தமிழகம் வந்து திருவாவடுதுறை மடத்தில் தங்கினார். தங்கள் குழுவிற்கு நாவலரைத் தலைமையாக்கினார்.

ஆறுமுக நாவலர் தில்லைக்கு வந்தபோது, தீட்சதர்கள் ஆராதனை செய்தபோது, அவர்கள் கூறிய சமஸ்கிருத மந்திரத்திற்கு

பொருள் கேட்க, பொருள் தெரியாதென்ன, பொருள் தெரியாது மந்திரச் சொற்களைக் கூறக்கூடாது என்று சொன்னதால் நாவலருக்கும் தீட்சதர்கட்கும் மனக்கசப்பு ஏற்பட்டதென்ற செவிவழிச் செய்தி கூறுகிறது. எவ்வாறோ தில்லை தீட்சதர்கள், சமயத்தை வளர்க்க வந்த ஆறுமுக நாவலரை தூற்றியும், சமயங்களை அழிக்க வந்த இராமலிங்கரைப் போற்றியும் வந்தனா என்பதை, நாவலர் இராமலிங்கர் மீது வழக்கு தொடுத்த பின்னர், தீட்சதர்கள் ஆறுமுக நாவலர் மீது வழக்குத் தொடுத்தார்கள் என்பதிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

ஆறுமுக நாவலர் இராமலிங்கரை எதிர்க்கிறார் என்பதினாலோ, அல்லது பொருள் தெரியாது மந்திரச் சொற்களைச் சொல்லக்கூடாது என்று நாவலர் கூறியதினாலே, எவ்வகையிலோ நாவலர் மீது பகைமை பூண்ட தீட்சதர்கள் 1869 சுக்கில ஆண்டு உத்தர தெரிசனத்தன்று இராமலிங்கரை சிதம்பதரத்தலம் ஆயிரக்கால் மண்டபத்தில் விரிவுரையாற்ற வேண்டி, இராமலிங்கரும் அவ்வாறே விரிவுரையாற்றினர். தனது விரிவுரையாற்றலின் போது, நாவலரைப்பற்றி ஒரு சொல்கூட சொல்லாததைக் கண்டு ஏமாற்ற மடைந்தவர்கள், கூட்டம் முடிந்த பின்னர் சிலர் கூடி, நாவலர் எனபதற்கு பொருள் கேட்க, நாவலர் என்றால், நாவினால் அலர் தூற்று வோர், நாவினால் துன்பப்படுபவர், நாவல்லாதவர் என்ற பொருள்களைக் கூறினார் என்பதை "மறுட்பா மறுப்பு" என்ற நூலில் காணலாம்.

தனது பெயரைப்பற்றி தாழ்வான சொற்கள் கூறியது நாவலர் செவிக்கு எட்டியது. இதனால் இராமலிங்கர் மீது ஆறுமுக நாவலர் கடலூர் நீதி மன்றத்தில் அவதூறு வழக்கு தொடுத்தார் என்பர் இராமலிங்கரோ இதனைப் "படுவழக்கு" என்கிறார். வழக்குகளிலே சிவில் வழக்கு நாகரிகமானது. கிரிமினல் வழக்கு மட்டமானது. படுவழக்கு என்பது மட்டமான கிரிமினல் வழக்காக இருக்கலாமோ என்று எண்ண வேண்டியுள்ளது.

வழக்கு விசாரணையன்று இராமலிங்கர் குறித்த நேரத்தில் நீதிமன்றத்தினுள் செல்ல, நீதிபதி முதல் நாவலர் வரை எழுந்து நின்று

கரங்கூப்பி வரவேற்க, வாதியை நாவலர் கரங்கூப்பி வரவேற்றதால், வரவேற்ற காரணம் தன்னையறியாது சரங்குவிந்தது என்று நாவலர் கூறியதால் நீதிபதி வழக்கைத் தள்ளுபடி செய்யப்பட்டதாக செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. ஆனால் நீதிமன்ற ஆவணங்களோ இராமலிங்கர் மீது நாவலர் கூறிய குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட வில்லையாதலால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது என்று இருப்ப தாகவும் கூறுவர். வழக்கு பற்றிய ஒரு பாடல்

அடிபிடித்துத் திரிகின்ற மறைகள்எலாம் காணா
அருள்வடிவைக் காட்டிநம்மை ஆண்டுகொண்ட கருணைக்
கொடிபிடித்த குருமணியைக் கூடுமட்டும் வேறோர்
குறிப்பின்றி இருப்பம்எனக் கொண்டகத்தே இருந்தேன்
படிபிடித்த பலர்பலவும் பகர்ந்திடஇங் கெனைத்தான்
படுவழக்கிட் டுலகியலாம் வெளியில்இழுத் தலைத்தே
மடிபிடித்து பறிக்கவந்த விதியைநினைந் தையோ
மனம்அலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

பின்னர் தில்லை தீட்சதர்கள் ஆறுமுக நாவலர் மீது கிரிமினல் வழக்குத் தொடுத்தனர். அவ்வழக்கு விசாரணையின்போது, தாம் தண்டிக்கப்பட்டால் தனது உயிரைவிட்டு விடுவேன். அப்படி விட் டால் தனது உடையை கங்கையில் விட்டுவிடு என்று தனது மாணாக் கர் சதாசிவத்திடம் கூறிவிட்டு நாவலர் சென்றதாகவும், விசாரணை யின்போது எதிர்தரப்பார் எழுப்பிய கடினமான வினாவிற்கு தக்கபதில் சொல்ல முடியாது, இவரது நா தழுதழுத்தது, கண்களில் நீர் வடிந் தது, இதனைக் கண்ணுற்ற நீதிபதி வழக்கைத் தள்ளுபடி செய்தார் என்று ஆறுமுக நாவலர் வரலாறு கூறும்.

தில்லை தீட்சதர்கள் இராமலிங்கரின் தோழமையும், நாவலரின் பகைமையும் பூண்ட காரணம், இராமலிங்கர் இனிமையும் கனிவும் கலந்த எண்ணற்ற பாடல்களை இறைவன் மீது பாடியதும், நாவலர் அவ்வாறு பாடாததாலோ என்று எண்ண இடமுண்டுபண்ணுகிறது.

## ஞானசபை தோற்றம்

வழக்குகள் முடிந்ததாயினும் உலக வதந்திகள் முடியவில்லை. இருதரப்பார் சார்பிலும் இகழ்தலும் புகழ்தலும் பரவிக் கொண்டுதான் இருந்தது. இதனைச் செவிமடுத்த இராமலிங்கர் வருந்துகிறார். கள் குடித்தவன் போல இராமலிங்கர் சாதியில்லை, மதமில்லை, சமய மில்லை யென்று உளறுகிறார் என்ற சொல்லைக் கேட்டு, யான் கள் அருந்தினேன், அதாவது. உலகவர் அருந்தினால் மயங்கி வீழ்ந்து புரண்டு உளறுகிறார்களே அந்த கள் யான் அருந்தவில்லை. அது இது அப்படி இப்படி யென்று மயங்கி உண்மை இன்மை யென்று தெரியாது உளறுகிறார்களே அந்த உள்ள மயக்கு அனைத்தினையும் ஒழித்து உண்மையைத் தெரிவிக்கக் கூடிய கள், இறந்து பிறந்து உழலாமல என்றும் இறவா நிலையில் இருத்துங்கள். அடுத்தவர்கள அடியேனை அடுத்து அடுத்து கண்டால் அவர்களுக்கு அறிவு தரும் கள் என்று அறிவிக்கிறார் இராமலிங்கர். அதனை விளக்கும் ஒரு பாடல் இதோ,

கள்ளுண்டான் எனப்புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டதும் உண்டடி நான்
எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் அன்றே
என்றும் இறவாநிலையில் இருத்துங்கள் உலகர்
உள்ளுண்ட போதுமயக் குற்றிடுங்கள் அலவே
உள்மயக் கனைத்தினையும் ஒழித்திடுங் கள்மடவாய்
அள்ளுண்ட பிறரும்எனை அடுத்தடுத்துக் கண்டால்
அறிவுதரும் அவர்க்கும் இங்கே யான் உண்ட கள்ளே.

இவைகள் பற்றி வருந்துவதோடு இராமலிங்கர் வெற்றி முரசும் கொட்டுகிறார். நேர்ந்தவர்கள் நேர்ந்தபடி நெகிழ்ந்துரைக்கும் வார்த்தைகளும். ஓர்ந்து செவிபுகத்துணியேன்" என்ற ஒரு முடிவுக்கு வந்து விடுகிறார்.

வஞ்சகர் அஞ்சினர் வாய்மூடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்

தஞ்சம் எமக்கருள் சாமிநீ என்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களே வென்றனர்.
புறங்கூறி னோரெல்லாம் புல்லெனப் போயினர்
பொற்படிக் கீழ்ப்புற மீளவு மேயினர்
மறங்கூறி னோம்என்செய் வோம்என்று கூயினர்
வாழிய என்றுசொல் வாயினர் ஆயினர்.

இசையாமல் போனவர் எல்லாரும் நாண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
வசையாதும் இல்லாத மேற்றிசை நோக்கி
வந்தேன்என் தோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே என்னுடை நண்பது வேண்டில்
நன்மார்க்க மாம்சுத்த சன்மார்க்கம் தன்னில்
அசையாமல் நின்றிங்கே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து.

என்று வெற்றி முரசு கொட்டினார் எனினும், இந்நிலையில் தில்லைத் திருத்தலத்தைத் திருப்பணி செய்வதைக் கைவிடுகிறார். இறைவனும் ஞானசபையை புதுமையாகவும், பொதுமையாகவும் அமைக்கவேண்டும் என்று அறிவுறுத்துகிறார் இறைவன் வரப்போகிறான் என்று 30-3-1871 ல் அறிவித்தபடி இறைவன் வந்திருக்க வேண்டும். தில்லைத் திருப்பணியை விட்டு ஞானசபைத் திருப்பணியைத் தொடங்கு என்று அவன் குறிப்பிட்டதாகவுள்ள குறிப்பைக் கீழே காணலாம்.

"நெடுங்காலம் மரண முதலாகிய அவத்தைகளால் துன்பமுற்றுக் களைப்படையும் உங்களை அவ்வவத்தைகளினின்று நீக்கிக் களைப்பும் கலக்கமும் தவிர்த்து அழியாத பேரின்ப சித்தியை அடைவித்தற் பொருட்டாகவே பூர்வஞான சிதம்பரத்தின் வடபால் பார்வதிபுரம் என்று குறிக்கப்படுகின்ற உத்தரஞான சித்திபுரத்தில் யாம் அளவு கடந்த நெடுங்காலம் சித்தியெலாம் விளங்கத் திருவருள் நடஞ்செய்வோம் என்றும், அதுதருணம் மிகவும் அடுத்து சமீபித்த தருணம் என்றும் அப்பதியினிடத்தே யாம் அருள் நடம்புரிவதற்கு அடையாளமாக ஓர் ஞானசபை காணுதல் வேண்டும் என்றும் திருவருள் குறிப்

பால் அறிவித்ததுமன்றி அருளுருவாகி யெங்களகத்தும் புறத்தும் அமர்ந்தருளி யாதோர் தடைகளுமின்றி அத்திருஞானசபையுந் தோன்றி விளங்க செய்வித்தருளிய தேவரீர் பெருங்கருணையைக் கருதுந்தோறும் பெருங்களிப்படைகின்றோம் என்பதாம்.

ஞானசபை பற்றிய விபரங்கள் அனைத்தும் அடுத்த இரண்டாம் பாகத்தில் காண்போம்.

# இராமலிங்கர் இறை வடிவம் பெற்று மறைதல்

இராமலிங்கர் தருமச்சாலையில் ஆரவாரமாக அமைதியின்றி யிருப்பதால், வடலூருக்குத் தென்மேற்கில் இரண்டு கல் தொலைவில் உள்ள (கருங்குழி கிராமத்தில் தங்கியிருந்த அதன்நேர் மேற்குப் பக்கத்தில்) மேட்டுக்குப்பத்திலுள்ள (அவ்வூரார் தங்கள் குருக்கள் வந்து தங்குவதற்கு எனக்கட்டப்பட்டிருந்த) விழல்வேய்ந்த குடிலில் தங்குகிறார். தங்கிய அவர், அக்குடிலில் உள்ள ஒரு அறையில் அமர்ந்து திருக்கதவை மூடிக்கொண்டு சில நாள் வெளிவராமல் இருக்கிறார். வெளிவராமல் இருந்ததைக் கண்டு தொண்டர்களில் சிலர் அஞ்சினர். சாலையை நடத்தவும் சங்கடப்பட்டனர். இதனால் 20-10-1870 சாலையில் உள்ளார்க்கு ஒரு கடிதம் எழுதுகிறார். அதில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது.

"என்னால் உங்களுக்கு நன்மை கிடைப்பது சத்தியம், நான் இன்னும் கொஞ்சதினத்தில் திருவருள் வல்லபத்தால் வெளிப்படுகின்றேன். அது பரியந்தம் பொறுத்திருங்கள், அஞ்ச வேண்டாம், சாலையை இலகுவாய் நடத்துங்கள்" என்பதாம்.

கொஞ்ச தினத்தில் திருவருள் வல்லபத்தால் வெளிப்படுகின்றேன் என்ற சொல்லை வைத்து, வள்ளலார் திரும்ப வருவார் என்று எல்லையிலாது, சொன்னார்கள், சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்பது வெளிப்படை..

இராமலிங்கர் திருவாய் மலர்ந்த திருவாக்குப்படி, கொஞ்ச நாள் கடந்து வெளியில வந்து நிலவுகிறார். புதுவையில் உள்ள சாமி யொருவர் சமாதியடையப் போவதாக இராமலிங்கருக்குத் தெரிவிக்கப் படுகிறது. அவருக்கு இராமலிங்கா 11-1-1871 ல் ஒரு திருமுகம் அனுப்புகிறார். அத்திருமுகத்தில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது.

"சுவாமிகட்கு வந்தனம்! தங்கட்குத் தற்காலம் நேரிட்டிருக்கிற ஆபத்தைக் குறித்து அஞ்சவேண்டாம். இநத ஆபத்தால் தேக ஆனி நேரிடாது கால பேதத்தால் நேரிடினும், தங்களை எவ்விதத்தால் ஆயினும் திருவருள் வல்லபத்தைக் கொண்டு திரும்பவும் பார்த்துப் பேசிக் களிப்பேன், தாங்களும் மிகுந்த விரைவில் என்னைப் பார்த்துப் பேசிக் களிப்பீர்கள. இது சத்தியம், சத்தியம், சத்தியம். இது என் வார்த்தையன்று, திருச்சிற்றம்பல முடையானின் திருவருளாணை, சற்றுங் கலங்க வேண்டாம்.

26-10-1870 கடிதத்தில் திருவருள் வல்லபத்தால் கொஞ்ச. தினத்தில் வெளிப்படுவேன் என்று அறிவித்தபடி, வெளிப்பட்டுத்தான் இந்தக் கடிதத்தை எழுதியிருப்பதாகத் தெளியலாம். மேலும் இக் கடிதத்தில், இந்த ஆபத்தால் தங்கட்குத் தேக ஆனி நேரிடாது· நேரிட்டாலும், திருவருள் வல்லபத்தால் தங்களைப் பார்ப்பேன், பேசிக் களிப்பேன, தாங்களும என்னைப் பார்ப்பீர்கள். பேசிக்களிப்பீர்கள் என்று குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்து. தேக ஆனியென்பது இறப்பது, அப்படித் தாங்கள் இறந்து போனாலும், திருவருள் வல்லபத்தைக் கொண்டு, தங்களை எழுப்பி பேசிக் களிப்பேன் என்ற கருத்தாழம் கொண்ட கடிதமாக இது திகழ்கிறது. திருவருட்பா பாடலில், இறந்த வர்களை எழுப்புவது. யான் செய்ய வேண்டுவதில்லை. "என் மேற் போர்த்த கம்பளத்தாலாகும் களித்து'' என்ற பாடல் இங்கு நினைவு கொள்ளத்தக்கது. புதுவை சாமிகளின் நிலையைப் பற்றி பின்னர் எங்கும் விளக்கப்படவில்லை.

சாலை சம்பந்தமுடையவர்கட்கு இட்ட சமாதிக் கட்டளை, என்ற தலைப்பில் தருமச்சாலையில் உள்ளவர்கட்கு 30-3-1871ல் எழுதிய

திருமுகத்தில், உயிரடக்கம் கொண்டவர்களை எரிக்காது. மண்ணில் உடலடக்கம் செய்ய வேண்டும். சாலைக்கு ஆண்டவர் எழுந்தருளு வார், அப்போது. மண்ணில் உடலடக்கம் செய்தவர்களை எழுப்பி யருளுவார் இதுசத்தியம் சத்தியம் என்று சத்தியமிட்டு அருளுபதேசம் செய்தருளியுள்ளார்கள்.

## இறந்தவர்களைக் எரிக்கக் கூடாது

"இரவில் தூங்கி எழுந்திருக்க மறந்தவரை தீ முட்டி எரிக்க எவ்வண்ணம் சம்மதித்தீர். இறந்தவர்களைக் கணகமுகுண்டாலும், ஒரு பயனுண்டே, சுட்ட சாம்பல் புன்செய் நிலத்திற்கு எருவிற்கும் ஆகாதே, குணம் புதைக்க உயிரடக்கம் கொண்டது, சுட்டால் அது தான் கொலை செய்வதற்குச் சமம் பணங்களைப் புதைத்து வைக்க சம்மதிக்கும் பேயரே! நீர் பிணங்களை புதைக்க ஏன் சம்மதிக்கவில்லை. பரனளிக்கும் தேகம், இதனைச் சுடுவது அபாராதம் எனப்பகர்கின்றேன். சிரம் நெளிக்கச் சுடுகின்றீர்" எனப் பல் வகையாலும் சாடுகின்றார்.

## சன்மார்க்கப் பெருப்பதி வருகை

சன்மார்க்கப் பெரும்பதி வருகை என்ற தலைப்பில் 12-4-1871ல் ஒரு அறிவிப்பின் மூலம் தெரிவித்திருப்பதாவது.

"இறைவன் விரைவில் தருமச்சாலைக்கு எழுந்தருளப் போகின் றான். வரப்போகின்ற தனித் தலைமைப் பெரும்பதி இதற்கு முன் சமய சாத்திர புராணங்களில் வந்ததாகச் சொல்லுகின்ற பலவகைப்பட்ட ஏற்பாட்டுக் கர்த்தர்கள். மூர்த்திகள், கடவுளர், தேவர், அடியார், யோகி ஞானி முதலானவர்களில் ஒருவரல்லர் இவர்கள் எல்லோ ரும் எதிர்பார்க்கின்றபடி எழுந்தருளுகின்ற தனித்தலைமைப் பெரும்பதி, அப்போது பலவகைப்பட்ட சமய பேதங்களும், சாத்திர பேதங்களும், ஜாதி பேதங்களும், ஆச்சார பேதங்களும் போய், சுத்த சன்மார்க்கப் பெரு நெறி ஒழுக்கம் விளங்கும். இது இருபத்து ஒன்பது ஆண்டிற்கு மேல்.

அவர் வருகை தருவதற்குள் நீங்கள் காலத்தை வீணிற் கடத்தாமல், ஒழுக்கமும், தயவும், கருணையுடன் கூடி நல்ல விசாரணையிலிருந்தால், பச்சைத் திரை வரையில் விலகும். ஆண்டவர் வந்தவுடனே மற்றத் திரைகளையும் விலக்கியருளுவார். முயலாதவர்கட்கு பரிபாக நிலையருளுவார் என்றும் விளக்கப்பட்டுள்ளது.

இந்த அறிவிப்பு. 12-4-1871 ல் வெளியாகிறது. இந்த 1871 + 29. 1900 இது பத்தொன்பதாம் நூற்றாண்டு கலியாண்டு முடிந்து, இருபதாம் நூற்றாண்டு அதாவது ஞான சித்தராண்டில் நடைபெறும் எனத் தெரிகிறது. இப்போது இருபதாம் நூற்றாண்டும் கடக்கப் போகிறதே, அப்பெரும்பதி வந்தாரா? எனக் கேட்டால், வந்திருப்பர் யாரும் முயற்சியில்லாதிருப்பர். அவர்கட்கு மனித அளவில் பரிபாக நிலையையருளி சென்றிருப்பர். இதனால் தான் எங்கும் சாதியில்லை, சமயமில்லை, மதமில்லை என்ற சொல் நிலவுகிறது.

## சரமச வேத பாடசாலை

சமரச வேத பாடசாலை யென்றொரு பாடசாலையை 11-1-1872 ல் ஆரம்பிக்கிறார். இதில் வாசிக்க விரும்புகின்றவர்கள், பதினைந்து வயதிற்கு மேற்பட்டவர்களாகி, நல்லறிவு, கடவுள் பக்தி, உயிரிரக்கம், பொது நோக்கம், திரிகரண அடக்கம் முதலிய நல் ஒழுக்கங்களையும், உண்மையுரைத்தல், இன் சொல்லாடல், உயிர்க்கு உபகரித்தல் முதலிய நற்செய்கை, ஒழுக்கங்களையும் பெற்று, சன்மார்க்கத்திற்கு உரியவர்களாயிருத்தல் வேணடும்.

இதில் வாசிக்கின்றவர்கட்கு, சிலகாலம் வாசித்து, வாசிப்பில் பயிற்சி ஏற்பட்டால். அந்த பயிற்சிக்கும் அவரவர் குடும்பத்திற்கும் பொருளுதவி செய்யப்படும். காலை மாலை சுமார் ஐந்தைந்து நாழிகை வாசித்தல் வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

பாலர்களை ஐந்து வயதில் பள்ளியில் படிக்க வைப்பார்கள். இப் பள்ளியில் படிக்க வயது பதினைந்து. படிக்கத தகுந்தவர்களின் தகுதி எல்லையிடப்பட்டதும், வாசிப்பில் ஏற்படும் பயிற்சிக்கும் ஏற்ப அவர் அவர் குடும்பத்திற்கும் பொருளுதவி செய்யப்படும் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. ஆனால் படிப்பது எதனையென்ற விளக்கமில்லை. ஒருக் கால் சாகாக் கல்வி, அல்லது படியாத படிப்பு என்பதாக இருக்கலாம். அல்லது சமரச வேதம் என்ற திருவருட்பாவாகவுமிருக்கலாம். வேதங் கள் என்பது நான்கு. அனைத்தையும் சமரசப்படுத்தும் திருவருட்பா சமரச வேதம் என பெருமான் கருதினார்களோ என்று எண்ண வேண்டியுளது.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் இறைவன் இருப்பிடத்தையும், அவர் இருப்பிட அமைப்பையும் ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளவும் சாதி சமய மத பேதமில்லாது, அனைவரும் கூடி வழிபடவும், இது வரை எங்குமில்லாது, எவராலும் சொல்லப்படாத சத்திய ஞான சபையை அமைத்து, நடைமுறைப்படுத்துகிறார்.

ஞானசபையின் அமைப்பையும், அதன் நடைமுறைகளையும் பின்னர் காண்போம்.

வடலூரில் உள்ள தருமச்சாலையை அப்பாசாமி யென்பவர் நடத்தி வருகிறார். அந்த சாலையில் இருப்பவர்களுக்குச் சலசலப்பு ஏற்பட்டு இது பெருமானுக்குத் தெரிவிக்கப்படுகிறது தருமச்சாலையில் இருப்பவர்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று 9-3-1872ல் ஒரு அறிவிப்பு செய்யப்படுகிறது. அதில் குறிப்பிட்டிருப்பதாவது. "இந்த சாலையால் எனக்கு மிகவும் சலிப்புண்டாகிறது அந்த சலிப்பு இரண்டு பக்கத்திலும் உபத்திரவம் பண்ணும், ஆதலால் சாலையில் இருக்கின்றவர்கள் எல்லாம் சன்மார்க்கத்திற்கு ஒத்து வாயடங்கி மன மடங்கி இருக்கவேண்டும். என் மேல் பழியில்லை சொல்லி விட்டேன, பின்பு வந்ததைப்படவேண்டும் என்று எச்சரிக்கை செய்யப்படுகிறது.

சாலையில் உள்ளவர்கட்கு மட்டுமல்ல, சன்மார்க்க சங்கத்திலும் சித்திவளாகத்திலும் இருப்பவர்கள் அனைவருக்கும் சேர்ந்து அவர்கள்

எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று விளக்கி 25-11-1872 ல் அறிவிப்பு ஒன்று அறிவிக்கப்படுகிறது. அந்த அறிவிப்பு சுருக்கத் தைக் கவனிப்போம்

இங்கே வசிப்பவர்கள் அனைவரும் வழிபாடு விடயத்தில் ஒரு தடையும் சொல்லாது ஒத்து இருத்தல் அவசியம், அப்படியில்லாது ஒருவர் மீது ஒருவர்க்கு விரோதம் ஏற்பட்டால், அதனைச் சாக்ரதைப் பட்டு உடனே மறந்துவிடவேண்டியது. அப்படி மறக்காமல் அதிக்ர மித்த வார்த்தைகளால் வைதால் அதனைச்சகித்துக் கொள்ளவேண்டும் சகித்துக்கொண்டால் வைதவர் அதனை மறந்து அவருடன் மனக்கலப் புடன் மருவுதல் வேண்டும். அப்படி மருவாது தொடர்ந்து வைதால் அவரை உடனே ஒதுக்கிட வேண்டியது. அந்த வைதலைக் கேட்டு சகித்துக் கொள்ளாதவர், அக்கூட்டத்தாருள் இரண்டொருவருக்குத் தெரிவிக்கவேண்டும் அப்படித் தெரிவிக்காது எதிர்த்து சண்டை. தொடுப்பவர்களும் இங்கிருத்தல் அனாவசியம். அவர்களையும் இந்த இடம் விட்டுப் போய்விடத்தக்க முயற்சி ஒவ்வொருவரும் செய்ய வேண்டும் என்பதாம்.

நடைமுறையின் விளக்கம் நன்றாக இருக்கிறது. ஒருமைப்பாட் டிற்கு ஊறு விளைவிப்போர்களை உடனே ஒதுக்குதல் வேண்டும். அவர் களை இவ்விடம் விட்டுப் போகத் தக்க முயற்சி ஒவ்வொருவரும் செய் தல் வேண்டும் என்ற கண்டிப்பு கவனிக்கத்தக்கது.

## உலக அறிவிப்புப் பத்திரிக்கை.

சித்திவளாகத் திருமாளிகையிலிருந்து உலக அறிவிப்பு என்ற ஒரு பத்திரிக்கையை 8-9-1872ல வெளியிடப்படுகிறது. அவற்றில் குறிப்பிட்டிருப்பதாவது.

வடலூர் சத்திய ஞான சபைக்கு முக்கிய சம்பந்த முடையதாகி அடுத்த கருங்குழி எல்லை மேட்டுக்குப்பத்தில் வழிபடப்படுகின்ற சித்தி

வளாகத்தில் வந்திருப்பவர்களும் வருகின்றவர்களும் வருபவர்களு மாகிய ஜனங்களுக்கு அறிவிப்பது.

மேற்குறித்த இடத்தில் இந்த மாதத்திற்கடுத்த புரட்டாசி மாதம் ஐந்தாந்தேதியில் அற்புதவிளக்கம் நேரிடுவதாக ஒரு வதந்தி வழங்கபடு கிறது. அது கேள்விப்பட்டு, நம்புதலோடு நீர்கள், நீர்களும் பொருள் வகையாளும், தேகவகையாளும், உழைப்பெடுத்துக் கொண்டு பின்பு நிட்டூரப்பட்டுக் கொள்ளுதல் வேண்டாம் அந்தகேள்வி உண்மையல்ல. இவ்விடத்தில் அற்புதம் விளங்குவது மெய்யோ, பொய்யோ, இந்தக் காலமோ எந்தக்காலமோ. ஆகலில் இந்த அறிவிப்பினால் ஜாக்கரதை யோடு உங்களுக்கு அடுத்த காரியங்கள் எவையோ அவைகளைச் செய்வீர்களாக என்பதாம்.

அற்புதம் விளங்குவது புரட்டாசி ஐந்தாந்தேதி இல்லை யென்று அறிவிக்கிரதேயன்றி அற்புதம் விளங்காது என்று அறிவிக்கவில்லை என்பது கவனிக்கத்தக்கது.

# பேருபதேசம்

பேருபதேசம் முழுதும் இரண்டாம் பாகத்தில் காணவும். அதில் உள்ள இரண்டொருகருத்தினைக் கீழே காணலாம். இந்த பேருபதேசத் திலிருந்து, இராமலிங்கர், உலகரின் ஊனக்கண்களுக்குத் தோன்றாது மறைந்து விடத்திட்டமிட்டுள்ளார்கள் என்பது, "இராத்திரி கூட நான் இல்லாமல் இந்தஜனங்கள் கண நேரம் இருக்கமாட்டார்களேயென்று ஆண்டவரிடத்தில் விண்ணபித்துக் கொண்டேன்" என்பதிலிருந்தும். "நீங்கள் கொஞ்ச தினத்திற்கு அப்படிச் செய்து கொண்டிருங்கள் நானும் இத்த உலகத்திலுள்ள எல்லா ஜீவர்களும் நன்மையடையப் பிரார்த்தித்தும் ஆண்டவரிடத்தில் கேட்டுக்கொண்டும் வருகிறேன்" என்று கூறுவதிலிருந்து தெரியவருகிறது.

ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசி மாதத்தில் சன்மார்க்க கொடி கட்டி பேருபதேசம் செய்த பின்னர், மேற்படி ஆண்டு கார்த்திகைத்திங்களில்

தனது அறையிலிருந்த திருவிளக்கைத் திருமாளிகைத் தென்புறத்தில் எடுத்து வைத்து, அப்புறத்திலுள்ள கதவைச் சாத்திவிடப்போகிறேன். இனிகொஞ்சகாலம் எல்லோரும் ஆண்டவர் இப்போது தீப முன்னிலையில் விளங்குகிறபடியால், உங்களுடைய காலத்தை வீணில் கழிக்காமல், "நினைந்து நினைந்து" என்ற தொடக்கமுடைய 28 பாசுரமடங்கிய பாடலில் கண்டபடி தெய்வ பாவனையை இந்தத் தீபத்தில் செய்யுங்கள் நானிப்போது இந்த உடம்பிலிருக்கிறேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன் என்பதாம்.

கதவு சாத்திவிடப்போகிறேன் என்றது. தனது அறைக்கதவு அல்ல. தென்புற தீபத்தின் பின்புறக் கதவு. நானிப்போது இந்த உடம்பிலிருக்கிறேன், இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன் என்று கூறியதிலிருந்து, இராமலிங்கர், உலகவரின் ஊனக்கண்களுக்குத் தோன்றாது மறைந்துவிடப் போகிறோம் என்ற திட்டவட்டமான அறிவிப்பைத் தெரிவித்துள்ளார் என்பதைக் கண்டுகொள்ளலாம்.

இராமலிங்கர், முன்னமே எடுத்த முடிவுகளின்படி, ஸ்ரீமுக ஆண்டு தைத் திங்கள் 19 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு பன்னிரண்டு மணிக்கு (30—1—1874ல்) தாமிருந்த அறையில் அமர்ந்து கதவை சாத்திவிட்டார்கள் என்பதை எல்லோரும் தெரிவிக்கின்றார்கள். ஆனால், இராமலிங்கர் அறையுள் போகும்போது என்ன சொன்னார்? அறைக்கதவு வெளியில் பூட்டப்பட்டதா? உள்ளே தாளிடப்பட்டதா? என்ற விபரத்தை. தொழுவூர் வேலாயுதம் காரணப்பட்டார், பிரங்கி மாநகரம் இராமசாமி. அரசாங்கத்தார், அருட்பெருஞ்ஜோதி அகவல் கத்தார், ஆ. பாலகிருட்டினனார், மேட்டுக்குப்பத்திலிருந்த ஒரு பெரியவர், இரத்தினம் இவர்கள் ஒவ்வொருவரும் ஒவவொருவிதமாகக் கூறுவர். இவைகளை ஒருங்குதிரட்டி ஒரேவிதமாகச் செய்வதும் இனி செய்யச் செய்வதும் பயனுடையதாம்.

## தொழுவூர் வேலாயுதர், தியாசாபிகல் சொசைட்டியாருக்கு அளித்த சான்றிதழில் காணும் குறிப்பு

1 அக்காலங்களில் பலமுறை தம்மைச் சூழ்ந்தவர்களைப் பிரிந்து, பிறர் கண்களுக்குப் புலப்படாவண்ணம் மறைந்து போவார்.

2 இவர் வயது 51 அடைந்தபோது தாம் உலகைவிட்டுப் போவதாகச் சொல்லி சீடர்களுடைய மனதை ஒருவகை ஆறுதலுக்குக் கொண்டுவர ஆரம்பித்தார்.

3 தாம் சமாதியில் இருக்கப் போவதாக விருப்பைக் காட்டினார்.

4 தமது சீடர்களுக்கு அன்பு நிறைந்த ஆசிகளைக கூறி தாமிருந்த அக்குடிசைக்குள் விரித்திருந்த படுக்கையில் சாய்ந்துகொண்டார்.

5 அவர் ஆணைப்படி அக்கதவு பூட்டப்பட்டது.

6 சாவியை சுவற்றில் இருந்த சிறு துவாரம் வழியாக உள்ளே ஊக்கிவிடப்பட்டு, அத்துவாரமும் மண் வைத்து அடைக்கப் பட்டது. ஸ்ரீமுக தை 19 வெள்ளி இரவு 12 மணி (30-1-1874)

## மேட்டுக்குப்பத்தில் ஒருவர் சொன்னது

நடுத்தர உயரமானவர் நடுத்தர பருமனுடையவர், கருப்பு நிறமுடையவர், காது சரியாக கேளாமலும், கண் பார்வை சரியாகத் தெரியாமலும், வாய் தெளிவாகப் பேசாமலும் தொண்ணூறு வயதென்று குறிப்பிடும் ஒருவரை நாம் 1948ல் சந்தித்து வினவியபோது அவர் வெளிப்படுத்தியதாவது,

1 வள்ளலார் மறையும் போது எனக்கு வயதுபதினாறு.

2 வள்ளலார் யாருக்கும் தோன்றாது மறைந்துவிடபோகிறோம் என்று சொன்னார். அதுகேட்டு நாங்கள் எல்லோரும் அழுதோம்.

3 நான் திரும்பி வருவேன் கவலைப் படாதீர்கள் என்றுசமாதானப்படுத்தினார்.

4 அவர் தங்கியிருந்த அறையில் ஒரு சமுக்காளம் விரிக்கப்பட்டு தலையணை வைக்கப்பட்டது.

5 இரவு பன்னிரண்டு மணிக்கு சுவாமிகள் உள்ளே போய், உள்பக்கமாகக் கதவினை பூட்டி சாவியை, கூரைக்கும் கீழ் சிறு துவாரம் இருந்தது. அதன் வழியாக வெளியில் இருப்பவரிடம் கொடுத்து பத்திரமாக வைக்கச் சொன்னார்.

6 அச்சிறு துவாரமும் மண் வைத்து அடைக்கச் சொன்னபடி மண் வைத்து அடைக்கப்பட்டது.

7 அந்தக் கதவு திறக்கப்படவுமில்லை, அவர் திரும்பி வரவுமில்லை.

## அரசு கெஜட் வெளியீடு

தென்னாற்காடு மாவட்ட ஆட்சியாளர், சித்திவளாகம் வந்து பார்வையிட்டு சென்ற பின், அரசு செய்தித் தாளில் (கெஜட்டில்) வெளியிட்டிருப்பதில் குறிப்பிட்டிருப்பதாவது,

1874ல் கருங்குழிக்கடுத்த மேட்டுக்குப்பம் கிராமத்தில் ஞான யோக சமாதிக்கு அவர் பயன்படுத்தி வந்த ஒரு அறைக்குள் சென்று தன்னைப் பூட்டிக் கொண்டு, அந்த அறையைச் சில காலம் திறக்க வேண்டாம் என்றும், தன் சீடர்களுக்குக் கட்டளையிட்டார். அந்த நாளிலிருந்து அவர் காணப்படவில்லை. அந்த அறை இன்னமும் பூட்டிக் கிடக்கிறது. அவர் மீது நம்பிக்கைக் கொண்டவர்கள். அவர் அதிசயிக்கத்தக்க முறையில் அவர் தம் கடவுளோடு ஐக்கியமாகி விட்டார் என்றும், நம்பிக்கையுடையவர்களுக்குத் தக்க காலத்தில் மறுபடியும் அவர் தோன்றுவார் என்றும் கொள்ளப்படுகிறது.

## காரணப்பட்டார் திரட்டி தி. நா. மு. வெளியீடு 1921 திருவருட்பாவில் குறிப்பிட்டிருப்பதாவது

ஸ்ரீமுக ஆண்டு மார்கழித் திங்கள் முதல் வள்ளலார் சித்திவளாகத் திருவறைக்குள் சென்று சிலநாள் கதவை மூடிக்கொண்டிருப்பதும், பிறகு வெளிவந்து பிரசங்கஞ் செய்வதும், மறுபடியும் சில

நாள் தாளிட்டுக் கொண்டு உள்ளே இருப்பதும் பின்னர் வெளிவந்து பிரசங்கஞ் செய்வதுமாகிய அருட்பெருநெறியில் திகழ்ந்தார்.

அங்ஙனம் நிகழும் நாட்களில் ஒருநாள் அன்பர்களை நோக்கி, கடையை விரித்தோம் கொள்வாரில்லை கட்டி விட்டோம், நீங்கள் அருள் அடைவதற்கு இந்தத் தீபத்தினை கடவுள் எனக் கொண்டு சீவகாருண்யமுடையராய்ச் சிந்தித்துக் கொண்டிருங்கள், இனி இரண்டரை கடிகை நேரம் உங்கள் கண்ணுக்குத் தோன்றமாட்டோம். இவ்வுலகத்திலும் மற்றெங்கும் இருப்போம. பின்னர் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வருவார். அப்போது இவ்வுருவுடன் சித்திகள் பல நிகழ்த்துவோம். அகவினத்தார்க்குச் சாகா வரமும் ஏனையர்க்குப் பரிபாக நிலையையும் அளிபபோம். நாம் திருக்கதவை மூடியிருக்குங் கால் அதிகாரிகள் திறக்கும்படி ஆஞ்ஞாபிக்கின் ஆண்டவர் அருள் செய்வார் என்று கட்டளையிட்டு சித்த சாந்தம் உண்டாகி ஸ்ரீமுக வருடம், தை மாதம் புனர்பூசத்தில் வெள்ளிக்கிழமையன்று இரவு பன்னிரண்டு மணிக்கு திருக்காப்பிட்டுக்கொண்டது.

## பிரங்கிமா நகரம் இராமசமி

அணுக்கத் தொண்டர்களில் ஒருவராகிய பிரங்கிமா நகரம் இராமசாமி அவர்தள் 1896ல் திருவருட்பா ஆறு திருமுறைகளும் வெளியிட்டதில் குறிப்பிட்டிருப்பதாவது.

## பிள்ளையவர்கள் திரு உரு மறைந்தது

தமதாப்த நண்பர்களைத் திருவருள் நோக்கால் நோக்கிக் கடை கணித்து அன்பர்காள யாம் உங்களை விட்டுச் சிலகாலம் பிரிந்திருக்க எண்ணங்கொண்டுள்ளோம், சதாநந்த சமாதி நிட்டை கூடி இச் சித்துள்ளோம். எனது சரீரம் சிறிது காலத்துள் உங்கள் கண்களுக்குத் தோன்றாது மறைந்துபோம். இக்காயத்தை உங்களில் யாராலும் அக்கினியில் தகிக்கவாவது. மண்ணில சமாதி வைக்கவாவது கிட்டாது. இனி நாற்பத்தீராயிர வருட காலம். சித்தராயமர்ந்திருந்து சகல சித்திகளும் சித்திக்கப் பெற்று ஆனந்தத் திருவிளையாட்டயர்ந்திருந்து அதற்குமேல்

பிரணவதேகியாகி, ஞானசம் பந்தகுருத்வ நிலைபெறுவோம். என்னும் குறிப்பை சுட்டாமல் சுட்டிக்காட்டிய பின்பு சாக்கிர முதலிய ஐந்தவத்தையுங்கடந்து நின்று திருவருட்கிருபா நோக்கத்திற்கு தம்மை உணவாக்கி முழுவதும் விழுங்கப்பட்டவராய் தத்துவ முழுதும் இச்சை வழி பணி கேட்கப் பிரணவமே திருஉருவாகச் சகசவருள் பிறக்க வடலூரையடுத்த மேட்டுக்குப்பம்கிராமத்தில் சித்திவளாகத்திருமாளிகைக்குள் கலி சகாப்தம் 4978ல் நிகழும் ஸ்ரீமுக வருஷம், தை மாதம் பத்தொனபதாந் தேதி சுக்கரவாரம் புனர்பூச நட்சத்திரம் கூடிய இராத்திரியில் செயற்கையுடல் இயற்கைஉடலாக திரிவுபடுஞ் சின்மாத்திர சகச சமாதியில் அசைவற நின்று தமது ஆத்மார்த்த சற்குருவை சிந்தித்து தாம் அமர்ந்திருந்த அவ்வறையை மூடிப்பூட்டிக்கொள்ள தமதாப்த நண்பர்கட்குக் குறிப்புணர்த்திப் பூட்டச்செய்து தாமும் தமது இந்திரியக் கதவை மூடி மவுன நிட்டை கூடி நித்தியானந்த முற்றனர்.

இக்குருநாதர் கட்டளை யிட்ட வண்ணம் இவர் நிட்டை கூடிய திருவறையை பூட்டப்பட்டு நாளது வரையில் அபிமானிகளால் பேணபட்டு வருகிறது.

## ஆ. பா. கூறுவது

ஆ. பாலகிருட்டினனார் திருமுகப்பகுதி பக்கம்111ல் அணுக்க தொண்டரின் ஒரு பிரதியில் காண்பதாக குறிப்பிட்டிருப்பதாவது.

சன்மார்க்க சங்கத்தார்க்கு இட்ட இறுதிக் கட்டளை.

ஸ்ரீமுகஞ் தைமீ 19வ (30—1—1874ல்)

நான் உள்ளே பத்து பதினைந்து தினமிருக்கப் போகிறேன். பார்த்து அவநம்பிக்கையடையாதீர்கள். ஒருக்கால் பார்க்க நேர்ந்து பார்த்தால் யாருக்குந்தோன்றாது வெறும் வீடாகத்தானிருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார். என்னைக் காட்டிக் கொடார்.

## சென்னை அருட்பெருஞ்ஜோதி அச்சக வெளியீடு

சென்னை அருட்பெருஞ்ஜோதி அச்சகத்தார் வெளியிட்ட திருவருட்பா ஆருவது திருமுறையில் காணப்படுவதாவது,

ஸ்ரீமுகவு தைமீ 19உ வள்ளலார் திருக்காப்பிட்டுக்கொள்ளும் தருணம் வெளியிட்டவை.

நாம் உள்ளே பத்து பதினைந்து தினமிருக்கப்போகிறோம். பார்த்து அவநம்பிக்கையடையாதீர்கள். ஒருக்கால் பார்க்க நேர்ந்து பார்த்தால் யாருக்குந்தோன்றாது வெறும் வீடாகத்தானிருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார். என்னைக் காட்டிக் கொடார் சுத்த பிரணவ ஞான தேகத்துடன் வெளிப்படுவோம். நாம் திருக்கதவை மூடியிருக் குங்கால் அதிகாரிகள் திறக்கும்படி ஆக்ஞாபிக்கின் ஆண்டவர் அருள் செய்வார். நாம் இந்த உடம்பிலிருக்கிறோம் இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம்.

## தண்டபாணி சுவாமிகள் தரும் தகவல்

வண்ணச்சரபம் மு :கதாச சாமிகள் என்னும் தண்டபாணி சுவாமிகள் இராமலிங்கரைப்பற்றி வினாப்பதிகம், அனுபவப் பதிகம் என இரு பதிகங்கள் கொண்ட தலைப்பில் பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றில் அனுபவப பதிகத்தில உள்ள இரு பாடல்கள வருமாறு

நம்புமிவ ணிமித்தமொரு நாரியிடந் தூதானேன்
வெம்புதுயர்க் காதரமா மிடிபட்டு மெலிவேன்பால்
அம்புவியெல் லாமறிய அறையுட்போம் வடலூரான்
வம்புரைப்பார் பலர்நாண வருவான்என் றுரைத்தானே.

பொற்றையொரு வில்லாகப் புவியூர்ந்து புரஞ்சென்றேன்
பற்றைவென்றோர் தங்களையும் பதையாமல் இகழ்வேன்பால்
அற்றையிற்சிற் சிலரேங்க அறையுட்போம் வடலூரான்
மற்றையவர் கண்கூச வருவான்என் றுரைத்தானே.

இதுவரை வள்ளற்பெருமான் இறைவடிவம் பெற்று, அதிசயம் என்று அனைவரும் அதிசயிக்காது. சாதாரணமாகவே சித்திவளாகத் திருவறைக்குள் அமர்ந்து திருக்கதவை மூடிய பாவனையில் உலகவரின் ஊனக் கண்களுக்குத் தோன்றாது ஆனதைப் பற்றி எட்டு பேர்கள் அவரவர்கள் கருத்துக்களை எடுத்துரைத்துள்ளனர் அவைகளில் இன்மையும் உண்மையும் உள்ளன. இவைகளில் உண்மைகளை மட்டில் ஒருங்கு சேர்ப்போம்.

தொழுவூரார் அன்று இரவு நடந்தது ஆயிரம் பேருக்குத் தெரிந்தது என்றார். தண்டபாணி சுவாமிகளும் "அம்புவி யெல்லாம் அறிய அறையுட்போம் வடலூரான்" என்றார். மேட்டுக்குப்பதிலுள்ள பெரியவர், வள்ளலார் மறைந்து விடப்போகிறேன் என்று சொன்ன வுடன் நாங்கள் எல்லாம் அழுதோம் என்றார் தொழுவூராரும் சீடர் களைச் சமாதானப்படுத்தினார் என்று சொல்வதால், தண்டபாணி சுவாமிகளும் "அற்றையிற் சிலரேங்க அறையுட்போம் வடலூரான்" என்பதில், சிலர் இனி பெருமானை எப்போது காணப்போகிறோம் என்று ஏங்கினர் என்பதை உண்மையெனக் கொள்ளலாம்.

அருட்பெருஞ்ஜோதி அச்சகத்தார் வெளியீட்டிலிருந்து, "நாமிப்போது ஒருடம்பிலிருக்கின்றோம், இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம்" என்ற ஒரு சொல் மட்டுமே எடுத்துக் கொள்ள லாம்.

ஆ. பாலக்கிருட்டினனார் பதிப்பிலிருந்து எதுவும் கொள்ளுவ தற்கில்லை.

பிரங்கிமா நகரம் இராமசாமி பதிப்பிலிருந்து, "தாம் அமர்ந் திருந்த அவ்வறையை மூடிப்பூட்டச்செய்து" என்பதைக்கொள்ளலாம்.

காரணப்பட்டார் வெளியீட்டிலிருந்து, "சித்திவளாகத் திரு வறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டிருப்பதும், பின் வெளியில் வருவதும், உபதேசம் செய்வதும், மறுபடியும் இவ்வாறே அறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டிருந்து பின் வெளிவருவதுமாயிருந்தார்" என்பதை மட்டுமே கொள்ளலாம்.

அரசு வெளியீட்டிலிருந்து, "அந்த அறை இன்னமும் பூட்டிக் கிடக்கிறது" என்பதைக் கொள்ளலாம். மேட்டுக்குப்பம் பெரியவர் சொல்லிலிருந்து, "பெருமான் மறைந்துவிடப்போவதாகச் சொன்ன வுடன் நாங்கள் எல்லாம் அழுதோம், அவர் திரும்பவும் வருவதாகச் சமாதானப்படுத்தினர். அன்று இரவு யாரும தூங்கவில்லை" என்ப தைக் கொள்ளலாம்.

தொழுவூரார் குறிப்பிலிருந்து ''அக்காலங்களில் தம்மைச் சூழ்ந்தவர்களைப் பிரிந்து, பிறர் கண்களுக்குப் புலப்படாவண்ணம் மறைந்து போவார். இவர் ஐம்பத்தொரு வயதை யடைந்தவுடன் தாம் இவ்வுலகைவிட்டுப் போவதாக சொல்லி சீடர்களுடைய மனதை ஒருவகை ஆறுதலுக்குக் கொண்டு வர ஆரம்பித்தார் தாம் சமாதியில் இருக்கப்போவதாக விருப்பைக் காட்டினார் தமது சீடர்களுக்கு அன்பு நிறைந்த ஆசிகளைக்கூறி, தாமிருந்த குடிசைக்குள் விரித்திருந்த படுக்கையில் சாய்ந்து கொண்டார். அவர் ஆணைப்படி அக்கதவு பூட்டப்பட்டது. என்பதைக்கொள்ளலாம். மேற்கூறியவைகளை ஒன்று திரட்டி ஒரு அமைப்பு உருவாக்கலாம்.

ஸ்ரீ முக ஆண்டு ஐப்பசித்திங்கள் ஏழாம்நாள் காலை 8-மணிக்கு சித்திவளாகத் திருமாளிகையில சுத்த சன்மார்க்கக்கொடி கட்டிச்செய்த பேருபதேசத்தில் 'இராத்திரி கூட நான் இல்லாமல் இந்தசனங்கள்கண நேரங்கூட இருக்க மாட்டார்களே யென்று ஆண்டவரிடத்தில் விண்ணப்பித்துக்கொண்டேன்என்றதோடு'நான் சொன்னபடி நீங்கள் விசாரப் செய்து கொண்டிருங்கள் இந்த உலகத்தில் உள்ள எல்லா சீவர்களும் நன்மையடையப் பிரார்த்தித்தும்ஆண்டவரிடத்தில் கேட்டும் வருகிறேன் "' என்று திருவாய் மலர்ந்தருளியதிலிருந்து அவர் உலகவர்களின் ஊனக்கண்களுக்குத் தோன்றாது மறைய திட்டமிட் டிருப்பது தெரியவருகிறது.

அடுத்த கார்த்திகைத்திங்களில் தனதுஅறையிலிருந்த திருவிளக்கை எடுத்து மாளிகைத் தென்புறத்தில வைத்து, அப்புறத் திலுள்ள'' கதவைச் சாத்திவிடப் போகிறேன். இனி கொஞ்சகாலம் எல்லோரும் ஆண்டவர். இப்போது தீப முன்னிலை விளங்குகிற

படியால் உங்கள் காலத்தை வீணிற்கழிக்காமல் தெய்வபாவனையை இந் சந்தீபத்தில் செய்யுங்கள், நானிப்போது இந்த உடம்பில் இருக்கிறேன் "இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்" என்றும் கூறிய திலிருந்தும் அவர் ஊனக்கண்களுக்குத் தெரியாது மறைந்து போவது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இந்தக்கதவு சாத்திவிடப் போகிறோம் என்பது. தென்புற முள்ள திருவிளக்கின் பின்புறமுள்ள கதவு

கதவினை உள்ளே பூட்டி சாவியை வெளியே கொடுத்தார் என்பதும் பூட்டிய கதவு திறக்கப்பட்டு வெறும் அறையாகக் காணப் பட்டது என்பதும் இனி இரண்டரைக்கடிகை நேரம் உங்கள் கண்களுக் குத் தோன்ற மாட்டோம் என்பதும், நாற்பத்தீராயிர வருடம் சித்தராய மர்ந்திருந்து பிரணவ தேகியாகி ஞானசம்பந்த குருதவ நிலையைக் பெறுவோம் என்பதும், நான் உள்ளே பத்து பதினைந்து தினமிருக்கப் போகிறேன், பார்த்து அவநம்பிக்கை அடையாதீர் என்று அறிவித் தார் என்பதும், சுத்த பிரணவ ஞான தேகத்துடனே வெளிப்படு வோம் என்பதும் இக்கதவினை அதிகாரிகள் திறக்குப்படி ஆக்ஞாபிக்கின் ஆண்டவர் அருள் செய்வார் என்பதும் அணுக்கத்தொண்டர்களின் கூற்று.

ஸ்ரீமுக வருத 19 வெள்ளி 30—1—1874 இராமலிங்கர் உலகவரின் கண்களுக்குத் தோன்றாது மறையப்போவதறிந்து ஆயிரம் பேர்களுக்குமேல் கூடினர் தாம் உலகைவிட்டுப் போவதாகச்சொல்லி சீடர்களின் மனதை ஒருவகை ஆறுதலுக்குக் கொண்டு வந்தார் இனி நாம் எலலோருடைய உள்ளங்களிலும் கலந்து கொள்வோம எனக்கூறி இரவு பன்னிரண்டுமணிக்கு தாமிருந்த அறையில் அமர்ந்து கொள்ளப் போவதாகவும், இவ்வறையைப் பூட்டிச் சாவியை சுவற்றில் உள்ள சிறு துவாரத்தின் வழியாக உள்ளே போட்டுவிட்டு அத்துவாரத் தையும் மண்வைத்து அடைத்து விடுங்கள், யாரும் எவ்வகையிலும் இக்கதவினைத் திறக்க முயல வேண்டாம், என்று கூறினர் இதனைக் கேட்டுப்பலர் அழுதார்கள். அழவேண்டாம் என்று கூறி சமாதானம் படுத்தினார் தமது சீடர்களுக்கு அன்பு நிறைந்த ஆசி கூறி தாமி ருந்த அறைக்குள் விரித்திருந்த படுக்கையில் சாய்ந்து கொண்டார். அப் [illegible] கதவு பூட்டப்பட்டு சுவற்றிலுள்ள சிறுதுவாரத்தின்

வழியாக சாவியை உள்ளே போட்டுவிட்டு அத்துவாரமும் மண்ணினால் அடைக்கப்பட்டது அக்கதவு மூடப்பட்டே இருக்கிறது.

## ஐந்தொழில் புரியும் ஆற்றல்

ஊன உடலை ஒழுக்க நெறிகளாலும், திருவருள் வல்லபத்தாலும் முழுக்க ஒளியுடலாகமாற்றி இறையருளோடு இரண்டறககலந்து அவனியை நடத்தும் ஐந்தொழில் ஆற்றல் பெற்று ஐந்தொழில் புரிந்து கொண்டிருப்பவர் இராமலிங்கர்தான். மற்றவர்கள் எவரும் இந்நிலையை எட்டவில்லை. என்பதை வள்ளலாரே தெளிவாக்கு தெளிவாக்குவர் ஒரு பாடலில்.

நோவாது நோன்பெனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம்எனைப்போல் சார்ந்தவரும்—தேவாநின்
பேரருளை என்போல் பெற்றவரும் எவ்வுலகில்
யார் உயர்நீ சற்றே அறை.

## திருமூலர்

உடம்பார் அழியின் உயிரார் அழிவர், திடம்பட மெய்ஞ் ஞானம் சேரவுமாட்டார், உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன் உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் என்ற திருமூலர், வாசியை யடக்கி யோக நித்திரையில் ஆழ்துள்ளார் அவர்களது உடலும் இருக்கிறது. அவ்வுடலுக்குள் உயிரும் இருக்கிறது. ஆனால் அவர் ஊன உடலை ஒளியுடலாக மாற்றவுமில்லை, இறைவனோடிரண்டறக் கலக்கவுமில்லை, ஆற்றல் பெற்று ஐந்தொழில் புரியவுமில்லை.

## வள்ளுவர்

இரவு நிறமுடைய இயமன் இனி எனை இறப்பிக்க எண்ணுவானா? எண்ணினால், மார்க்கண்டனின் உயிரைப் பிடிக்க முயன்று நடராசர் காலால் உதைக்க, இயமன் வீழ்ந்து உடலில் காயம் பட்டு,

அக்காயத்திற்குக் கட்டுப்போட்டு மருந்திட்டு காயம் ஆறிவிட்டாலும் அதனால் ஏற்பட்ட வடு இருக்கிறது. அவ்வடுவை எண்ணியாவது இனி அடியவர் உயிரைப் பிடிக்கச்சென்றால் உதை கிடைக்கும் என்று அதனால் உயிர்பிடிக்க எண்ணக்கூடாது என்று எண்ணுவானா? என்ற இராமலிங்கர் போல, வள்ளுவர், நோவாத நோன்பு நோற்பதில் ஆற்றல் தலைப்பட்டவரின். உயிர்பிடிக்க இயமன் குதித்துக் கொண்டுவர மாட்டான், வர எண்ணவுமாட்டான் என்று கூறிய வள்ளுவரும் இறந்து போனார்.

மனிதகுலம் புனித முடன் வாழ்வதற்கு
வழிகாட்டி யென்னுமொரு குறளதிலே
கனிவுடைய தெய்வமீது அதுதானென்று
கலகமிடும் உலகவர்தம் கலகமற
இனியதொரு வழியில்லை நீடுவாழ
இயன்றதொரு வழியுமில்லை இறைவனொடு
புனிதமுடன் கலப்பதனைப் புகலவில்லை
பொய்வாழ்வைப், புகன்றதுவே மெய்வாழ்வில்லை

- துறவி கந்தசுவாமி

## குமாரதேவர்

இந்த உடல் பழுதுற்றால் நியதி இந்த உடலிலுள்ள உயிருக்கு வேறு ஒரு உடலை உருவாக்கித்தரும், பழுதற்ற உடலை விட்டு உயிர் புது உடலுக்குப் போய்விடும். போனால் முன்பிருந்த உடல் பிணமாகி விடும். அப்படி உயிர் புது உடலுக்குப் போகவில்லை யென்றால் இந்த உடலிலேயே இருக்கும். இப்படியில்லாது உயிர் இந்த உடலையும் விட்டுப்போய், வேறொரு உடலையும் பற்றாது இடையில் எவ்விதத்திலும் நடமாடாது என்று உறுதி கூறிய குமாரதேவரும் சமாதியானார்.

## மணிவாசகர்

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கு என்று உபதேசித்த மணிவாசகரும் அந்தணர்கள் வாசகத்திற்குப் பொருள் வினவ,

எல்லாம் அவரே என்று அறிவித்து வெளியில் கலந்தார் என்பர். அப்படியானால் ஊன உடல் வெளி உடலாக எப்படி மாறிற்று என்ற விளக்கமில்லை. அப்படி வெளியில் கலந்தவர் இறைவனின் வெளியில் கலந்தாரா? ஐந்தொழில் புரியும் ஆற்றலைபெற்று புரிந்து வருகிறாரா? என்ற விளக்கமுமில்லை.

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நாகைலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே

## சுந்தரர்

சுந்தரர் பதினெட்டு வயதில் மணவாழ்க்கையை வெறுத்து வெள்ளானை மீதேறி கைலாயம் சென்று ஒலியில் கலந்தார் என்பர். வெள்ளானை எது? கைலாயம் எங்குளது, ஊன உடல் ஒலியுடலாக எவ்வாறு மாறிற்று, இறைவனோடு இரண்டறக்கலந்தாரா? ஐந்தொழில் புரியும் ஆற்றலைப் பெற்றாரா? என்ற விபரமும் விளக்கமுமில்லை.

பெண்ணைக் கூடஎண்ணியதால் அண்ணலவர் சுந்தரர்
விண்ணுலக ஆணையினால் மண்ணுலகம் வந்தனர்
மண்ணுலகில் வந்து வந்து மாதராசை தவிர்ந்ததும்
மண்ணுலகை விட்டிருந்த விண்ணுலகம் சென்றனர்.

— துறவி கந்தசுவாமி

## சேரமான் நாயனார்

சேரமான் நாயனாரும் சுந்தரரைப் பின்தொடர்ந்து குதிரைமீது ஏறிச்சென்றார் என்பர், இதுவும் விளக்கமும் தெளிவுமில்லை.

## ஞானசம்பந்தர்

திருஞான சம்பந்தர் திருமணத்தின் போது ஜோதிதோன்ற காதலியோடு அதில் கலந்ததுமட்டுமல்ல, அத்திருமணத்திற்கு வந்தோர் எல்லோரையும் கலக்கச்செய்தார் என்பர், இயற்கைக்கு மாறாக இது இயலுமா? ஊன உடல் ஒளியுடலாக மாறுவது கடினம் தவப்பயனால் தான் மாறினாலும், அவ்வாறு மாறவேணடும் என்ற எண்ணமில்லாதவர்களையெல்லாம் மாற்றுவது பொருந்துமா? மாற்றினாலும் இறையொளியில் கலந்தாரா? ஐந்தொழில் புரியும் ஆற்றல் பெற்றாரா? விளக்கமுமில்லை.

கருணைமிகு சமணரவர் கடவுளில்லை யென்றிட
தருணமதைத் தவிர்த்திடவே சம்பந்தரும் வந்தனர்
வருகைதந்து சமணர்களை வாதில்வென்று கொன்றபின்
அருளொளியில் இறந்துபிறந்த அணங்குடன டைந்தனர்

— துறவி கந்தசுவ

## நாவுக்கரசர்

நாவுக்கரசர் திருப்புகலூர் தலத்தில் எண்பத்து ஒன்றாவது வயதில் சிவலிங்கத்துடன் ஐக்யமாகிவிட்டார் என்பர். இது உருவில் கடந்ததை விளக்கும், உருவில நம் உரு எவ்வாறு கலக்கும்? கலக்க முடியும் என்ற விளக்கமுமில்லை, தெளிவுமில்லை.

## அருணகிரியார்

தனது உடலை வைத்து கிளியுடல் எடுத்துச் சென்றவர். திரும்பி வந்து பார்த்தபோது, அவ்வுடல் சிதைத்து இல்லாமல் செய்ததையறிந்து, அவர் கிளியுடலிலேயே இருக்கிறார் என்பர், அவருக்குக் கிளியுடலேயன்றி ஒளியுடல் இல்லை.

## மார்க்கண்டர்

பதினாறு வயதில் இயமன் தனது உயிர்பிடித்தேகுவான் என அறிந்த மார்க்கண்டர், அதிலிருந்து விடுதலை பெற இறைவனை நாடினார். குறித்தகாலம் வந்தவுடனே இயமன் உயிர் பிடித்தேக வர, இயமனைக் கண்டவுடன் மார்க்கண்டர் அஞ்சி சிவலிங்கத்தைக் கட்டிப் பிடிக்க வேறு வழியில் இயமன் பாசக்கயிற்றினை சிவலிங்கத்தையும் சேர்த்து வீச, கோபித்த இறையவர் தோனறி இயமனை உதைத்த தோடு மார்க்கண்டனுக்கு என்றும் பதினாறு வயதாகவே இருக்க வரமளித்தனர் என்பர். அப்படியானால் மார்க்கண்டனின் ஊன உடல் என்ன ஆயிற்று. அவர் எந்த உடலோடு என்றும் பதினாறாக இருக்கிறார், விளக்கமில்லை;

## இதற்கு வள்ளலார் தரும் விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| மார்க்கண்டன் என்பது | | — | விவேகி |
| உருத்திரன் | ,, | — | தனித்த ஆன்ம அறிவு |
| இயவன் | ,, | — | மயக்கத்தைத் தரத்தக்க வெகுளி சினம் முதலியவை |
| மரணம்தவிர்த்தது | ,, | — | மயக்கத்தையும் மறைப்பையும் (தவிர்த்தது |
| இடது | ,, | — | சந்திரகலை |
| கால | ,, | — | சாற்று |
| பாசக்கயிறு | ,, | — | அஞ்ஞானம் |
| சூலம் | ,, | — | குணங்கள் |

இறப்பையும் இருப்பையும் உண்டுபண்ணுவது சூரிய கலை சந்திரகலை, விவேகியென்ற மார்க்கண்டனை சினம் என்கிற கூற்றுவன். குணம் என்கிற சூலமும். அஞ்ஞானம் என்கிற பாசக்கயிற்றினால் கட்ட மார்க்கண்டன் என்ற விவேகி. உருத்திரன் என்ற தனித்த அறிவோடு கூட. அவ்வறிவு இறப்பை உண்டு பண்ணுகின்ற சந்திர கலையை மேலேற்றி இருப்பதை உண்டுபண்ணுகின்ற சூரிய கலையில் நடமாடச் செய்ததே எம சம்மாரம் என்பர்.

## தாயுமானவர்

நிட்டை கூடி இருந்ததை யறியாத மானிடர் இறந்து விட்டார் என்று உடலை எரித்தனர் உடல் ஒருபகுதி எரிந்ததும் நிட்டைகலைந்த தாயுமானவர் செய்வதறியாது உடலை விட்டார்.

## நந்தன்

நந்தனும் தில்லை தெரிசனத்தின் போது உடலோடு மறைந்தான் என்பதும் விபரம் இல்லை.

## இராமர்

இராமர் பல அதிபலை என்ற மந்திரங்கற்று, பசி இளைப்பு இல்லாமல் நீடித்து வாழ்ந்து இறந்தார் என்று இராமாயணம் கூறும் என்பர். ஒரு இராமாயணத்தில், அநுமன் சீதையை அணுகியபோது இராமர், சீதையையே யெண்ணி, மது,, மாமிசங்களை விட்டார் என்று கூறுகிறது. இராமரும் மது மாமிசம் உண்பவர் என்றும் கூறுவர்.

## கண்ணன்

கீதையில் கண்ணன் இறப்பு பிறப்பு இயல்பானதே யென்று கூறியதோடு, பக்தி யோகம், கருமயோகம், ஞானயோகம் இவை களால் கடவுளையடையாலாம் என்று கூறுகிறதோடு, கண்ணனும் இறந்தார் என்று கூறுவர். நோவாலே மடிந்திட்டான் புத்தன் கண்டீர், நுவலரிய அந்தணனாம் சங்கராச்சாரியன் மாண்டான். பார்புகழும் ஆற்றில விழ்ந்திறந்தான் பகருகின்ற கணையாலே கண்ணன மாண்டார் என்று கூறுவர் என்பர்.

## பட்டினத்தார்

முற்றும் துறந்த முனிவராம் பட்டிணத்தாரும் ஒற்றியூரில் சிவலிங்கமானார் என்பர். ஊன உடல் சிவலிங்க உருவாக எப்படி மாறிற்று விளக்கமில்லை, ஐந்தொழில் புரியும் ஆற்றலுமில்லை.

## புத்தர்

புத்தருக்கும் புற்றுநோய் ஏற்பட்டு உயிரை விட்டு சமாதி யடைந்தார் என்பர். இத்துடன அகத்தியர் அகப்பேய் சித்தர். கோரக்கர், மச்சேந்திரர், இடைக்காடர், பரம்பாட்டி கடுவெளி சித்தர் கருவூரார், சீராளர், சிவகவி, திருமாளிகைத் தேவர், போகர்' பத்திர கிரியார் 'முத்துத்தாண்டவர், ஆண்டாள் இவர்கள் எல்லாம் உயிரோடு சமாதியடைந்தவர்களேயன்றி ஒளியுடலும் பெறவில்லை, இறைவ

னோடு இரண்டறக்கலக்கவுமில்லை. ஆற்றல்பெற்று ஐந்தொழில் புரியவுமில்லை.

ரமணர், இராமகிருட்டினர், மகாத்மா இவர்கள் எல்லாம உயிரடங்கி உடலடக்கம் (சமாதி) யானவர்கள்.

எல்லோரும் இறைவனைத் தேடி ஓடினார்கள். இராமலிங்கரைத் தேடி இறைவன் வந்தான். துன்பெலாம் தீர்ந்தது சுகம் பலித்தது. அருளொளி நினைச் சூழ்ந்தது. உலகில் வன்பெலாம் நீக்கி, நல்வழி யெலாம் ஆக்கி மன்னுயிர் எல்லாம் களித்திட நினைந்தனை நினது மன நினைப்பின் படிக்கே அன்பை நீ பெறுக உலவாது நீடுழி விளையாடுக ஆட்சிதந்தோம் அருளாட்சி தந்தோம நினைக்கைவிடோம் ஆணை நம்மானை யென்று ஆணையிட்டு அளித்துள்ளார்

இராமலிங்கர் பாடல்களில் தரும் குறிப்பு. ஆறுமுகத்தோடும் பன்னிரு கரத்தோடும் மயில்மீது முருகன் தோன்றினார். நீயும நானுமோர் பாலும் நீருமாய் நிற்கும்படிச்செய் என வேண்டினேன் சொன்ன உடன் முன்னால் நின்று கண்ணுற்ற அவன் காணாது போயினான்.

கைலை மலையிலுள்ள கைலாசநாதர் காளைவாகனத்தோடு கண்ணெதிரே தோன்றினார் அருள்தா என வேண்டினேன். ஒன்றும் சொல்லாது ஓடி மறைந்தார்.

வெள்ளிமலையிலும் பொன்மலையிலும் வீற்றிருக்கும் நடராசர் சிவகாமியோடு தோன்றினார். தெருளாத பருவத்தே தெருட்டி மணம் புரிந்தவரே. அருளமுதம் அளிப்பன் என்றே அன்று மணம் புரிந்தவரே. இனித்த சுகம் அறிந்து கொளா இளம்பருவந்தன்னிலே, என்புருவ நடு விருந்தவரே. அன்றிதேன் வருகின்றேன் என்று போனவரே ஆட்கொள்ள வேண்டும் என்று அடி பணிந்து வேண்டினேன். உன்னைப்பார் உன்னுளே என்னைப்பார் என்று சொல்லிவிட்டு ஓடி மறைந்தார்.

பார்த்துப் பார்த்து பார்வை யிழந்தது. விழித்து விழித்து விழிகள் இளைத்தது, நினைத்து நினைத்து நினைவு ஒழிந்தது.

உணர்ந்து உணர்ந்து உணர்வுகலற்றது. நந்நிதியே ஞானநடத்தரசே பொன்னுரிமை நாயகனே என்று கூவிக் கூவி அழுது அழுது கண்களில் நீர் ஆறாக ஓடியது. செய்வதறியாது அயர்ந்து கிடந்தேன் ஆதி அந்தமில்லா ஜோதியான இறைவன் பாதி இரவில் செம்பருக் கைக்கல் உருத்த நடந்து வந்து, சித்திவளாகம எனும் இந்த ஓலைக் குடிலின் கதவு திறந்து, வாயிற்படியின் வெளியில் ஒரு காலும், உள் ஒருகாலும் வைத்து நின்று. இப்பாவியேனை யெழுப்பி அருட்ஜோதி யெனும் ஒன்றினை வாங்கென கொடுக்க. நான் யாரோ. எதேவென மறுசக வலிந்து கொடுத்து, மரணமற்று வாழ்க, புலவர் தொழ வாழ்க என வாழ்த்தி மறைநததுடன், மற்றுமொரு இரவில் வந்து நினைவூட்டி அச்சந்தவிர்த்ததோடு. அடுத்தொரு நாள் இரவில் வந்து, யானிருந்து சித்திவளாகக் குடிலுக்குள் நுழைந்து, எனது உள்ளமெனும் சிறு குடிசை உள்ளும் நுழைந்து, ஊன் உடலை ஒளியுடலாக மாற்றி அவனோடு இரண்டறக் கலந்து கொள்ளச் செய்ததோடு, ஐந்தொழில் புரியும் ஆற்றலையும் அளித்தான் என்றும் விளக்குவர்.

## சபாபதி

ஸ்ரீமுக வருஷம் தை மாசம் 19 சுக்கிரவாரம் புனர்பூசங் கூடிய மதிவளர்கலை தினத்தில் இராத்திரி முற்கூறிய ஷை திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரப் இராமலிங்க பிள்ளையவர்கள் (முன் பல சந்தர்பங்களில பலவிதங்காக குறிப்பால் உணர்ந்துகொள்ள விவகரித்திருந்த வண்ணம) சித்திவளாகத் திருமாளிகையில் அருட் பெருஞ் சித்தியாவர்க்கும் காலக்கிரமத்தில் புலப்பட தனது தேகத்தை அசைவற சுத்த சிவசன்மார்க்க மரபின் வண்ணம் நிறுத்தி மகா மவுனமாய் பேரானந்த நித்திரையில் அமர்ந்தருளினர்.

## இரத்தினம்

சுவாமிகள் திருக்காப்பிட்டுக்கொண்ட போது அழகுகுருக்கள் என்கிற சபாபதி அவ்விடத்தில் இல்லை சுவாமிகள் உள்ளே போய்க் கதவினைத் தாளிட்டுக் கொண்டதும், கல்பட்டு இராமலிங்கமும், தொழுவூர் வேலாயுதனாரும் அக்கதவினைப்பூட்டி சீல் வைத்தார்கள்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 6 | இருபத்தொரு நாளில் | ஐந்தாம் திருநாளில் |
| 3 | 7 | பகவலவன் | பகலவன் |
| 6 | 3 | எல்லோா | எல்லோர் |
| 6 | 19 | உபதேசங்ளேயும் | உபதேசங்களையும் |
| 6 | 24 | பெறதாவர்களால் | பெறாதவர்களால் |
| 6 | 27 | மறைபைத் | மறைப்பைத் |
| 7 | 14 | அம்மயமாதன | அம்மயமாதல் |
| 7 | 16 | சாகாகக்கல்வி | சாகாக்கல்வி |
| 7 | 22 | பகுத்திய | படுத்திய |
| 19 | 20 | ஒடித்பித்தாய் | ஒடிப்பித்தாய் |
| 20 | 13 | ல்வியை | கல்வியை |
| 21 | 22 | இளக்கணங்களிலே | இலக்கணங்களிலே |
| 28 | 15 | சொறு | சோறு |
| 28 | 19 | கொண்டிருப்பதகை | கொண்டிருப்பதைக் |
| 37 | 30 | சொறுண்டிருக்கத் | சோறுண்டிருக்கத் |
| 44 | 13 | பள்ளியரை | பள்ளியறை |
| 51 | 11 | யென்னும் | யென்றும் |
| 57 | 13 | புன்செயக் | புன்செய்க் |
| 61 | 19 | உளகில் | உலகில் |
| 65 | 5 | இராமங்கரைப் | இராமலிங்கரைப் |
| 65 | 14 | சிதம்பதரத்தலம் | சிதம்பரத்தலம் |
| 75 | 6 | பொருள்வகையாளும் | பொருள்வகையாலும் |
| 75 | 6 | தேகவகையாளும் | தேகவகையாலும் |
| 75 | 13 | அறிவிக்கிரதேயன்றி | அறிவிக்கிறதேயன்றி |
| 79 | 18 | அவர்தள் | அவர்கள் |
| 79 | 26 | மண்ணில | மண்ணில் |
| 80 | 3 | திருவருட்திருபா | திருவருட்கிருபா |
| 80 | 7 | பத்தொனபதாம் | பத்தொன்பதாம் |
| 81 | 16 | அனுபவப | அனுபவப் |
| 82 | 10 | மேட்டுக்குப்பதிலுள்ள | மேட்டுக்குப்பத்திலுள்ள |

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 83 | 22 | விசாரப் | விசாரம் |
| 85 | 7 | தெளிவாக்கு | தெளிவாக |
| 87 | 2 | எனற | என்ற |
| 87 | 3 | வெளியிலு | வெளியிலும் |
| 87 | 4 | லந்தாரா? | கலந்தாரா? |
| 87 | 19 | நாயனாறும் | நாயனாரும் |
| 87 | 19 | பின்தொடாந்து | பின்தொடர்ந்து |
| 88 | 15 | கடந்ததை | கலந்ததை |
| 89 | 8 | மாாக்கண்டனின் | மார்க்கண்டனின் |
| 89 | 13 | இயவன் | இயமன் |
| 89 | 17 | கால | கால் |
| 89 | 20 | இறத்பையும் | இறப்பையும் |
| 89 | 23 | உருத்திணன் | உருத்திரன் |
| 90 | 4 | வாழுந்து | வாழ்ந்து |
| 90 | 8 | இயல்பாணதே | இயல்பானதே |
| 90 | 10 | கடருளையடையாலாம் | கடவுளையடையலாம் |
| 90 | 14 | கண்ணனமாண்டார் | கண்ணன்மாண்டார் |
| 90 | 20 | பரம்பாட்டி | பாம்பாட்டி |
| 91 | 8 | நினைந்தனை | நினைத்தனை |
| 91 | 24 | அன்றிதேன் | அன்றிருந்தேன் |
| 92 | 1 | உணர்வுகலற்றது | உணர்வுகளற்றது |
| 92 | 2 | பொன்னுரிமை | யென்னுரிமை |
| 92 | 5 | சித்திவளாகம | சித்திவளாகம் |
| 92. | 8 | எதேவென | எதோவென |
| 92 | 18 | சிதம்பரப் | சிதம்பரம் |
| 92 | 19 | பலவிதங்காக | பலவிதங்களாக |